**A & Co Series 1.**

# சுதந்திரப் போர்

அல்லது

# உப்பள முற்றுகை.



அருணகிரி அண்டு கம்பெனி,

தபால் பெட்டி 377,

மவுண்ட்ரோட் :: சென்னை.

ரைட் ரிஜிஸ்டர்] [விலை அணா 4.

# சுதந்திரப் போர்

அல்லது

# உப்பள முற்றுகை.



(கற்பனைக் கதை)

ரகுநாதசர்மா, வீரசுந்தரம், இவைகள் எழுதிய

தென்பாதி, T. S. கனகசபை

எழுதியது.



அருணகிரி அண்டு கம்பெனி,

தபால் பெட்டி 377,

மவுண்ட் ரோட் :: சென்னை.



[விலை அணா 4.

# சுதந்திரப் போர்

அல்லது

# உப்பள முற்றுகை.

---

## அத்தியாயம் 1.

---

### ஆச்சாரியார் தேசபக்தி—ருக்குமணி கல்யாணம்.

தீவான் பகதூர் ராகவாச்சாரியார் ஒரு பிரசித்தி பெற்ற தேசபக்தர். வெகுகாலமாகக் காங்கிரஸ் மகா சபையில் அதி தீவிரமாக உழைப்பவர். பெரிய தேசாபிமானி என்ற பெயருடன் தமிழ் நாடெங்கும் சுற்றித் தேசியப் பிரசாரம் செய்து அதன் மூலமாக ஏராளமான பணம் சம்பாதித்துக் கொண்டார். அவரது 65-வது வருடக் கொண்டாட்டம் மையிலாப்பூர் கடற்கரையோரத்திலுள்ள "முராஹரி" விலாசம் என்ற மாளிகையில் அதி விமரிசையாக நடைபெற்றது. இந்த வைபவத்திற்காகச் சென்னையிலுள்ள பிரபலஸ்தர்கள் அனைவரும் விஜயம் செய்திருந்தார்கள். ஆடம்பரமான விருந்துகளும் பெரிய சங்கீதக் கச்சேரிகளும் நடைபெற்றன. மாலை 6-மணிக் கெல்லாம் முராஹரி விலாசம் ஆயிரக் கணக்கான மின்சார விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. ஸ்ரீமான் ஆச்சாரியார் மாளிகையின் முகப்பில் நின்று வரக்கூடிய விருந்தினர்களை வரவேற்று வந்தனோபசாரம் செய்து, சந்தனம், புஷ்பம், தாம்பூலம் முதலியவைகள் கொடுத்து மரியாதை செய்து கொண்டிருக்கையில், இங்கிலாந்தில் ஐ. ஸி. எஸ். படிப்பிற்

காகச் சென்றிருக்கும் அவரது மகன் ரங்கராமானுஜம் ' தன் தந்தையின் 65-வது ஆண்டு பூர்த்தி விழாவிற்குத் தான் வரக் கூடாமற் போனதைக் குறித்துக் கிலேசப் படுவதாக, அனுப்பியிருந்த தந்தியைப் பார்த்து திவான் பகதூர் ஆச்சாரி யார், 10 வருடங்களுக்கு முன் இறந்துபோன தமது அரிய மனவியை ஞாபகப் படுத்திக் கொண்டு சிறிது வருந்தினர். அச்சமயம் கும்பகோணத்திலிருந்து மற்றோர் தந்தி வந்தது.

" நாளையதினம் பெரிய பொதுக் கூட்டம். பணமுடிப்பு தயாராக இருக்கிறது. ஜனங்கள் தங்கள் வருகையை ஆவலுடன் எதிர்ப்பார்க்கின்றார்கள் "—காங்கிரஸ் கமிட்டி. தந்திச்செய்தியைக் கண்டு ஆச்சாரியார் அளவிலாச் சந் தோஷமடைந்தார்.

"தேசமெங்கும் உப்பு சத்தியாக்கிரகம் பலமாகப் பரவி வருகின்றது. உப்பு காய்ச்சுதற்கும், சட்டத்தை மீறுதற் கும், தங்கள் உடல், பொருள், உயிர், அனைத்தையும் தியாகம் செய்துவிட்டு ஆயிரக்கணக்கான தொண்டர்கள் புறப்பட்டு விட்டார்கள். இதுவரையில் ஆயிரக் கணக்கான தொண்டர்கள் சிறை புகுந்திருக்கின்றார்கள். இந்த நெருக் கடியான சமயத்தில் காங்கிரஸ் இயக்கத்திற்குப் பண உதவி சம்பாதிக்கவேண்டியது தேசாபிமானிகளின் கடமையாகும். ஆதலால் இத் தந்திக்கு நான் உடன்படாமலிருக்க முடியாது. இன்றைய கொண்டாட்டங்களையும், இராப்போஜனத்தையும் எனக்காக நீங்களிருந்து சிறப்பாய் நடத்திவையுங்கள். நான் இரவு போட் மெயிலுக்குக் கும்பகோணம் போகின்றேன்" என்று ஆச்சாரியார் தன் நண்பர்களிடம் சொன்னர்.

"தேச சேவையைவிடக் கொண்டாட்டம் பெரிதல்ல" என்று எல்லோரும் ஆமோதித்தார்கள். உடனே திவான் பகதூர் ஆச்சாரியார் கும்பகோணத்திற்குப் பிரயாணப்பட்டு விட்டார்.

கும்பகோணம் ஸ்டேஷனில் ஸ்ரீமான் ஆச்சாரியாரை ஆயிரக்கணக்கான ஜனங்கள் வந்து ஆடம்பரமாக வரவேற்று ஊர்வலமாகக் காந்தி பார்க்கிற்கு அழைத்துச் சென்றார்கள். அன்று மாலே சட்ட மறுப்பைப் பற்றிப் பதினாயிரக்கணக்கான ஜனங்களின் முன் உருக்கமாக ஆச்சாரியார் நீண்டதோர் பிரசங்கம் செய்தார். ஆச்சாரியாருடைய வன்மையான பிரசங்கம் கேட்போர் மன உணர்ச்சிகளைத் தட்டி எழுப்பக்கூடியதாயிருந்தது. பின்னர் சில தொண்டர்கள் தேசிய கீதம் பாடினார்கள். பாரத தேவியின் பண்டைச் சிறப்புகளைப் பற்றியும், தேசியத் தலைவர்களின் பெருமைகளைப்பற்றியும் புகழ்ந்துரைக்கின்ற இக்கீதங்கள் உண்மையான ஒரு தேசாபிமானத்தைத் தூண்டிவிட்டு இந்தியர்களின் உள்ளத்தில் ஒரு வகை வீர சக்தியைத் தட்டி எழுப்பக்கூடியவை. இக்கீதங்களைக்கேட்ட மாத்திரத்தில் இந்தியர்களின் சுதந்திர வேட்கை அதிகரிக்கின்றது. பிரசங்கங்களெல்லாம் முடிந்தவுடன் ஸ்ரீமான் ஆச்சாரியாருக்குக் கும்பகோணம் காங்கிரஸ் தலைவர் ரோஜாமாலை சூட்டினார். பலர் அவருக்கு வந்தனோபசாரம் கூறினார்கள். சட்டமறுப் பியக்கத்தில் சேருவதாக அனேகம் தொண்டர்கள் வாக்களித்தார்கள். பதினாயிரம் ரூபாய்கள் கொண்ட ஒரு பணமுடிப்பு காங்கிரஸ் மகா சபைக்காக ஆச்சாரியார் அவர்களிடம் அளிக்கப்பட்டது. அத்துடன் கூட்டம் கலைந்தது.

அன்றிரவு ஆச்சாரியார் அரண்மனை சத்திரத்தில் தங்கியிருந்தார். ஆச்சாரியாரைப் பேட்டிகண்டு பேசுவதற்காக வந்தவர்களின் எண்ணிக்கை யெல்லாம் அடங்கிய பின் அச் சத்திரத்துப் பிராமணர் மிகவும் வாட்டமான முகத்துடன் ஆச்சாரியார் முன்னிலையில் வந்து நின்றார்.

"அய்யரே! என்ன விசேஷம்" என்று ஆச்சாரியார் மிக அன்புடன் கேட்டார்.

"சுவாமிகளே! தங்களுடைய பிரசித்தியைப் பற்றி வெகுவாய்க் கேள்விப்பட்டிருக்கின்றேன். ஏழைப் பிராமண

ளுகிய நான் ஒரு காரியமாகத் தவித்துக் கொண்டிருக்கின்றேன். என் மனக்குறையைத் தங்களிடம் தெரிவித்துத் தங்கள் மூலமாகப் பரிகாரம் ஏதாவது செய்து கொள்ளலாமெனக் கருதுகின்றேன்'' என்று சத்திரத்துப் பார்ப்பனர் மிகவும் மரியாதையுடன் கூறினர்.

"பிராமணுேத்தமரே! நமது பாத கண்டத்தில் பிறந்தவர்கள் அத்தனைபேரும் என் சகோதரர்கள். ஆதலால் உமக்கு என்னுலியன்ற உதவி எதையும் செய்யத் தயார்'' என்ருர் திவான் பகதூர் ஆச்சாரியார்.

"நான் தங்களிடம் எப்படிச் சொல்வது எனத் தயங்குகின்றேன். பாழும் பிராமணீய சம்பிரதாயங்களால் என் குடும்பம் அடியோடு கெட்டுவிட்டது. நான் மிக ஏழை. வயிற்றுப் பிழைப்பிற்காக மாதம் பதினைந்து ரூபாய் சம்பளத்திற்கு இச்சத்திரத்திற்கு வருபவர்களை யெல்லாம் உபசரித்து வரவேண்டியதா யிருக்கின்றது. என் சம்சாரம் இறந்து போய் நாலைந்து வருஷங்களாய் விட்டன. சொர்ண விக்கிரகம் போல் என் கன்னிகை யொருத்தி இருக்கின்ருள். வரதட்சணை கொடுக்க எனக்கு ஜவேஜி இல்லாததினுல் அவளைக் காலா காலத்தில் விவாகம் செய்துகொடுக்க முடியவில்லை. வயதோ இருபதாய் விட்டது. மங்கைப் பருவமடைந்த பெண்ணை வைதீக ஒழுக்கத்திலுள்ள பிராமணர்கள் விவாகம் செய்துகொள்ளமாட்டார்கள். இனி நான் என்ன செய்ய முடியும்? அக் கன்னிகையை வைத்துக்கொண்டு வருந்துகின்றேன். தாங்கள் சிபார்ஸு செய்தால் யாராவது பிராமணர்களில் சமுதாய சீர்திருத்தக்காரர்கட்கு விவாகம் செய்து கொடுத்துவிடலாம். ஏழையாகிய எனக்கு இந்த உபகாரம் செய்தால் தங்கள் கீர்த்தி இன்னும் பன்மடங்கு அதிகமாகப் பிரகாசிக்கும்'' என்ருர் அய்யர்.

கன்னிகை என்ற அளவில் ஆச்சாரியாருக்கு ஒருவகை இன்பமுண்டாயிற்று. "தாமே விவாகம் செய்துகொண்டா

லென்ன" என்ற ஒரு ஆசை அவர் மனதிலெழும்பியது. வயது 65 ஆய்விட்ட போதிலும் தன் சரீரம் இன்னும் தளர்ந்து போகவில்லை என்று எண்ணினார்.

"ஆனால் மிக்க சந்தோஷம்! நமக்கும் மனைவி இறந்து 10 வருஷம் ஆய்விட்டது.. பையன் ஒருவன் சீமையில் ஐ. ஸி. எஸ். படிக்கிறான். மறு விவாகம் செய்துகொள்ளலாம் என்கிற அபிப்பிராயமும் உண்டு" என்று புன்னகையுடன் கூறினார் ஆச்சாரியார்.

"பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று." தங்களைவிட மேலான மாப்பிள்ளை எனக்கு எங்கிருந்து வரப் போகின்றார்" என்று சத்திரத்து ஐயர் சந்தோஷப்பட்டார்.

"அப்படியானால் நான் சென்னை சென்றவுடன் தெரிவிக்கின்றேன். இனி கவலைப் படவேண்டாம். உமது மகளை நாமே விவாகம் செய்து கொள்கின்றோம். கலியாண ஏற்பாடுகள் முடிந்தவுடன் உமது கன்னிகையை அழைத்துக் கொண்டு வந்து சேரும். நான் இன்றிரவே சென்னைக்குப் போகின்றேன்" என்று ஆச்சாரியார் கூறுகையில், "அப்பா, அப்பா!" என்று கூப்பிட்டுக்கொண்டு ருக்குமணி எதிரே வந்தாள். கோடி சூரியப்பிரகாசம் போன்றிருந்த அவள் சரீர வன்மையை ராகவாச்சாரியார் பார்த்த அளவில் வயோதிகப் பருவ மேலீட்டால் தளர்ந்திருந்த அவர் தேகத்திலுள்ள நாடிகளெல்லாம் முறுக்கேறின. மங்கைப்பருவ முதிர்ச்சியால் பளபள வென மின்னொளியைப்போல் பிரகாசிக்கும் சரீர காந்தியும், வட்ட வடிவமான முகவிலாசமும், மிரட்சியடைந்த மான் விழிகளைப் போல் மிளிரும் கருவிழிகளும், ரோஜாமலரின் நிறம் போன்ற செந்நிறம் வாய்ந்த கன்னங்களும், பருத்து விம்முகின்ற பயோதரங்களும், கண்கொள்ளாச் சேவையாக ஜொலித்தன. வயதிற்கேற்ற அழகின் பெருக்கை வெளியிடுவதற்கேற்ப, பெண்களின் பருவ வயதில் மிக சுவாரஸ்யமான

பாகமாகிய 20-வது வயதில் ருக்குமணியின் புஜங்களும், மலர்க் காங்களும், உருண்டு திரண்டு மழ மழப்பேறி கண்டவர் மனதை அப்படியே பருகத்தக்கனவாகக் காணப்பட்டன. ருக்குமணி எழ்மையான ஸ்திதியிலிருந்தபடியால் ஆடம்பரமான ஆடை யாபரணங்க ளணிந்துகொண்டில்லே. இயற்கையழகில் மித மிஞ்சியிருந்த அவளுக்குச் செயற்கை யழகு எதற்காக? சற்றே பருத்துப் பூரித்த ஸ்தனங்கள் குலுங்கவும், மதிமுகத்தில் இள நகை தவழவும்,கண்களினின்றும் பேரொளிவீசவும், ருக்குமணி ஒய்யாரமாக வந்தவள்—தன் தந்தையின் எதிரில் பெரியார் ஒருவர் உட்கார்ந்து பேசிக்கொண்டிருப்பதைப் பார்த்து நாண முற்று உடனே மறைந்து விட்டாள். ஆச்சாரியார் கண் களுக்குப் பளிச்சென்று ஒரு மின்னல் தோன்றி மறைந்தது போன்றிருந்தது. ருக்குமணியைப் பார்த்த மாத்திரத்தில் ஆச்சாரியார் மனம் அனலில் விழுந்த மெழுகைப்போல் உருகிற்று. அவரது வயோதிகப் பருவத்திற்குத் தகாத எண்ணங்களும் எழுச்சிகளும் அவர் உள்ளத்திலுண்டாயின. உடனே 2,000 ரூபாய்கள் எடுத்துச் சத்திரத்துப் பிராமணர் கையில் கொடுத்து விவாகத்தைப்பற்றி உறுதி செய்து கொண்டு சென்னைக்குப் புறப்பட்டார்.

அடுத்த வாரத்தில் திருப்பதியில் ஸ்ரீ வெங்கடாஜலபதி சன்னதியில் ஸ்ரீமான் திவான் பகதூர் ராகவாச்சாரியாருக் கும் ஸ்ரீமதி ருக்குமணியம்மாளுக்கும் விவாகம் நடைபெற் றது. தம்பதிகளின் சுற்றத்தார்களில் முக்கியமானவர்கள் மட்டில் வந்திருந்தார்கள். மறுதினம் ஆச்சாரியார் தமது மனைவியுடன் சென்னை வந்து சேர்ந்தார். முராஹரி விலாசத் தில் இந்த விவாக வைபவத்தை முன்னிட்டுப் பிரமாதமான விருந்து நடைபெற்றது. சென்னையிலுள்ள தினசரிப் பத் திரிகைகள் இச்சீர்திருத்த விவாகத்தையும், விருந்துகளின் விசேஷத்தையும், பற்றிப் பிரமாதமாகப் புகழ்ந்து எழுதி யதுடன் தம்பதிகளின் புகைப்படத்தையும் பிரசுரித்தன.

ஆச்சாரியாரின் மனோகரமான இல்வாழ்க்கை ஆரம்பமாயிற்று. அழகிற் சிறந்த ருக்குமணியின்மீது அவர் அளவுகடந்த ஆர்வங்கொண்டார். அழகிற்கு அழகு செய்ததுபோல் ருக்குமணியின் சரீரமெங்கும் வைர நகைகள் ஜொலித்தன. அன்றாடம் தமது "ரோல்ஸ் ராய்ஸ்" காரில் ருக்குமணியுடன் மிக விலையுயர்ந்த உடுப்புகளை யணிந்துகொண்டு கடற்கரைக்குச் செல்லுவார். இளந்தம்பதிகளின் உல்லாச விளையாட்டுகளில் ஒன்றையேனும் அவர் பாக்கி வைக்கவில்லை.

ஆச்சாரியார் சம்மந்தப்பட்டவரையில் இளங்கொடியாள் ருக்குமணியுடன் இன்பகரமான இல்வாழ்க்கை மிக மனோகரமாக இருந்திருக்கலாம். ஆனால் ருக்குமணியின் மனோநிலமை எப்படி யிருந்திருக்கு மென்பதை அவளைப்போல் வயோதிகர்களுக்குத் தியாகம் செய்யப்பட்ட பெண்கள்தான் அறிவர். தன் முடிவு இவ்வாறானதைப்பற்றி ருக்குமணியால் வருந்தாமலிருக்க முடியுமா? **"கல்லேன்றலும் கணவன், புல்லேன்றலும் புருஷன்"** என்ற பழமொழிப்படி கூடுமான வரையில் நிம்மதியாகத் தன் வாழ்நாளைக் கடத்த எண்ணினாள்.

சென்னையின் நாகரீகம் ருக்குமணியையும் வந்து பிடித்துக் கொள்ளலாயிற்று. மைலாப்பூர் பார்ப்பிணிகளின் அரை பாடி ஜாக்கெட்டும் (Half body jacket), பூட்ஸ் காலும், மூக்குக் கண்ணாடியும், மஸ்லின் உடையும், டேப் வைத்துப் பின்னிய ஜடையும், நொடி நொடிக்கும் நடையும், இவள் கண்களைக் கவரலாயின. மிகக் கௌரவமான கும்பகோணம் நடையுடை பாவனைகளை நீக்கி இந்நவீன அலங்கிருதங்களில் புகுந்தாள். இதனால் இவளது அழகு அதிக ஆடம்பரமாகத் திகழ்ந்தது பெண்களுக்கென ஏற்பட்டிருக்கும் ரிக்ரியேஷன் கிளப்புகளிலும் (Recreation Clubs) கடற்கரைக் காலட்சேபங்களிலும் ருக்குமணிக்கு விருப்பமுண்டாயிற்று. ஆச்சாரியாருடைய அபரிமிதமான செல்வத்தினால் அவளுக்கு வேண்டிய வசதி

களுக்கு எவ்வித குறைவுமில்லாதிருந்தது. இவளுக்கெனப் பிரத்தியேகமான சிப்பந்திகளும் மோட்டார் வண்டியும் ஏற்பாடு செய்யப்பட்டன.

வயோதிகராகிய ஆச்சாரியாருடைய தேசியத் தொண்டு விவாகத்திற்குப்பின் சிறிது குறைவுபடலாயிற்று. தன் மனைவியை விட்டு வெளியே போவதற்கு அவர் மன வருத்த மடைந்தார். அன்றாடம் கடற்கரையில் வாலிப தம்பதிகள் உற்சாகமாகக் கைகோர்த்துக்கொண்டு உலாவுவதை ருக்குமணி பார்த்து வருவதால், மனக்கலக்கமடைந்தாள். ஆச்சாரியார் அவள் அருகாமையில் வருவதும், காதல் மொழிகள் பேசுவதும் ருக்குமணிக்கு மிக அருவருப்பாய்க் காணப்பட்டன. கூடுமான வரையில் அவரைப் பிரிந்து ஏகாந்தமா யிருக்கவே அவள் பிரியப் பட்டாள். ஆனால் கிழக்கணவர்கள் தங்கள் வாலிப மனைவிகளைப் பிரிந்திருக்க ஒருக்காலும் பிரியப்பட மாட்டார்களாகையால், ஆச்சாரியார் எப்போதும் தன் அழகிய மனைவியைப் பார்த்துக் கொண்டு அவள் அருகாமையிலேயே இருக்க ஆசைப்பட்டிருப்பார். இத் தர்ம சங்கடத்திற்கு என்ன செய்வது ? ருக்குமணி ஆச்சாரியாருடைய தேச பக்தியைத் தூண்டிவிட்டு அவரை ஒரு நீண்ட சுற்றுப் பிரயாணத்திற்கு அனுப்பிவிட முடிவு செய்துகொண்டாள். ஆச்சாரியார் சந்தோஷமாயிருக்கக்கூடிய சமயம் பார்த்து ருக்குமணி அவர் அருகாமையில் போயுட்கார்ந்து "தாங்கள் விவாகமானதிலிருந்து மூன்று மாத காலமாக எங்கும் போக வில்லையே. தேசமெங்கும் கொதிப்பாயிருக்கும் இச்சமயம் ஒரு பெரிய இயக்கத்தின் தலைவராகிய தாங்கள் இவ்வாறு சொஸ்தியாக வீட்டிலிருந்தால் தங்களது தற்கால நிலைமையைப் பார்த்துப் பலர் பரிகசிக்கமாட்டார்களா ?" என்று கேட்டாள்.

ருக்குமணியின் மிருதுவான தலை மயிரை ஆச்சாரியார் தடவிக்கொண்டே "ருக்குமணி ! என் ஆயுள் முற்றிலும

தேசத்திற்காக உழைத்துக்கொண்டிருந்து விட்டால் இனி எக் காலத்தில் நான் ஓய்வு எடுத்துக்கொள்வது? அத்துடன் உன் னைப் பிரிந்து நான் எப்படி இருக்க முடியும். நீ என் எதிரில் இல்லாவிட்டால் எனக்கு பொழுது போகமாட்டேனென் கிறது. நான் ஒருவன் பிரயாசையை நிறுத்திவிட்டால், அத ஞல் நமது இயக்கம் அடியோடு மூழ்கிவிடப்போகின்றதா ?" என்ருர் ராகவாச்சாரியார்.

"இந்த நெருக்கடியான சமயத்தில் தாங்கள் அவ்வாறு விட்டுக் கொடுக்கக் கூடாது. எதிர் கட்சிக்காரர்கள் எள்ளி நகையாடுவார்கள். மேலும் நமது பணவருமானமும் கெட்டுப் போய்விடும்" என்ருள் ருக்குமணி.

"ருக்குமணி! தேசபக்தி என்ற பெயரால் ஜனங்களை ஏமாற்றி இதுவரையில் இச்சென்னை இராஜதானியில் நான் மாத்திரம் பத்து லட்சம் ரூபாய்களுக்குமேல் சம்பாதித்து விட்டேன். இதிலிருந்து என்போன்ற எனது சகோதர பக்தர்கட்கு எவ்வளவு கிடைத்திருக்கலாமென்பதை நீயே யூகித்துக்கொள். பாரத மாதாவின் பெயரால் நாங்கள் ஏழை இந்தியர்களைப் பகிரங்கக் கொள்ளையடித்து விட்டோம். எனக்குப் போதுமான பணம் சேர்ந்துவிட்டது. இனி நிம்மதி யாக இருக்க வேண்டியதுதான். பிராம்மணரல்லாதார் கட்சி வலுவடைந்து நாடெங்கும் பிராமணத் துவேஷம் அதிகரித்து விட்டது. காங்கிரஸ் ஆணையின்படி காங்கிரஸ்காரர்களாகிய நாங்கள் சட்டசபையைப் பகிஷ்கரிக்கும்படிக் கட்டாயப்படுத் தப்பட்டதால் நாட்டில் எங்கள் செல்வாக்கு குறைகின்றது. தற்போது இருக்கப்பட்ட பயங்கரமான ராஜிய நிலைமையில் காங்கிரஸ் வாதிகள் எந்த நிமிஷத்திலும் சிறை செல்லத் தயாராக இருக்கவேண்டும். ருக்குமணி! உன்னைப் பிரிந்து நான் எப்படிக் கடூரமான சிறையில் தனித்திருக்க முடியும்" என்ருர் ஆச்சாரியார்.

"சிறை செல்லக்கூடிய அதிகப் பிரசங்கம் ஒன்றும் தாங்கள் செய்யவேண்டாம். இன்னும் சில வருஷங்கள் சென்றால் தங்களால் பணம் சம்பாதிக்க முடியுமா? ஆதலால் காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ளவேண்டும்" என்றாள் ருக்குமணி.

"ருக்குமணி! என் மகன் இன்னுஞ் சில மாதங்களில் சீமையிலிருந்து ஐ. ஸி. எஸ். பரிட்சையில் தேறி வந்துவிடுவான். அவன் வந்தால் மாதம் இரண்டாயிரம் மூவாயிரம் சம்பாதிக்கப் போகின்றான். நமக்கென்ன குறை? நீ ஏன் இன்னும் செல்வம் வேண்டுமென்று ஆசைப்படுகின்றாய்" எனக் கேட்டார் ஆச்சாரியார்.

"ஆயினும் திடீரென்று தாங்கள் தேசத் தொண்டினின்றும் அவ்வளவு சீக்கிரமாக விலகிவிட்டால் நாடெங்கும் ஒரே புகைச்சலாகப் போய்விடும். 'ஆதலால் மாதம் ஒரு முறை யாவது காங்கிரஸ் யாத்திரை செய்து வாருங்கள்" என்றாள் ருக்குமணி. ஆச்சாரியாரும் இதற்கு உடன்பட்டார். ருக்குமணி இவ்வாறு தந்திரமாக ஆச்சாரியாரை வெளிப் பிரயாணத்திற்குத் தயார் செய்து அனுப்பிவிட்டாள்.

உப்பு சத்தியாக்கிரகத்தைப்பற்றி ஊர் ஊராகப் பிரசங்கம் செய்துகொண்டும் பணமுடிப்புகள் பெற்றுக்கொண்டும் ஆச்சாரியார் தேசமெங்கும் சுற்றிக் கொண்டிருந்தார்.

அடிக்கடி தன் மனைவிக்குக் கடிதம் எழுதத் தவறமாட்டார். அவ்வப்போது சேரக்கூடிய பணங்களை யெல்லாம் உடனுக்குடன் ருக்குமணிக்கு அனுப்பிவைப்பார். ஆச்சாரியார் வெளிப் பிரயாணத்திலிருக்கையில் சென்னையில் ருக்குமணி மிக அமைதியாகத் தன் சிநேகிதைகளுடன் உல்லாசமாகக் காலம் போக்கி வந்தாள்.

திவான் பகதூர் ராக்வாச்சாரியார் அரசாங்கத்தாரால் கைதிசெய்யப்பட்டு சட்டத்தை மீறும்படி ஜனங்களைத் தூண்டி

விட்டதற்காகக் குற்றம் சாட்டப்பட்டு 3 மாதம் தண்டனை யடைந்தார். அவரது தியாக சிந்தையையும், வயோதிக பருவத்தையும் கவனியாமல் அவர் தேசத்திற்கு இயற்றிய சிறந்த தொண்டுகளையும், பாராட்டுவதற்காக அவர் சிறை சென்ற தினம் நாட்டில் ஒரு விழாவாகக் கொண்டாடப்பட்டது. அன்று தேசமெங்கும் ஹர்த்தல் நடந்தது. ராகவாச்சாரியார் எ வகுப்புக் கைதியாகச் சிறையிடப்பட்டார். அவர் சிறைபட்ட ஒரு மாதத்திற்கெல்லாம், அவர் மகன் ரங்காராமானுஜம் ஐ. ஸி. எஸ். பரிட்சையில் தேர்ச்சிபெற்று—நவம்பர் மீ 13ௗ சென்னைக்குத் திரும்பி வருவதாகச் சீமையிலிருந்து ஒரு கடிதம் வந்தது. தன் மகன் ஐ. ஸி. எஸ். பரிட்சையில் தேர்ச்சி பெற்றதைக் குறித்து ஆச்சாரியார் சந்தோஷப்பட்டபோதிலும், வெகு காலமாகப் பிரிந்திருந்த தன் மகனை வரவேற்கச் சந்தர்ப்ப மில்லையே யென்று சிறிது வருந்தினர். இச்சந்தோஷ சமாசாரத்தை ருக்குமணிக்கு உடனே தெரிவிக்கலானர்.

" அன்பு மிகுந்த ருக்குமணிக்கு அனேக ஆசீர்வாதம்! தேசத்தின் நன்மைக்காகப் போராடி நான் சிறை சென்றதைப்பற்றி மிகச் சந்தோஷமா யிருக்கின்றேன். ஆனல் உன்னைக் காணுத துன்பம் மட்டில் என்னை விட்டு அகல மாட்டேனென்கிறது. ஒரு மாதம் கழிந்து விட்டது. பாக்கி இருக்கப்பட்ட இரு மாதங்களையும் இரு தினங்களாகக் கழித்து விட்டு வருகின்றேன். நிற்க சீமையில் ஐ. ஸி. எஸ். படித்துக் கொண்டிருந்த என் மகன் பரிட்சையில் தேர்ச்சியடைந்து இந்தியாவுக்குத் திரும்புகிறுன்.—நவம்பர் மீ 13ௗ சென்னையில் எதிர்பார்க்கப்படுகின்ற "ஜார்ஜ்" என்னும் கப்பலில் அவன் வந்து சேருவான். இச்சந்தோஷ சமாசாரத்தை உனக்கு முன்னதாகத் தெரிவிக்கின்றேன்."

ராகவாச்சாரியார்.

ருக்குமணி கடிதத்தைப் படித்துப் பார்த்து மகிழ்ந்து குறிப்பிட்ட தினத்தில் ரங்காமானுஜத்தின் வருகையை எதிர் பார்த்துக் கொண்டிருந்தாள். ரங்காமானுஜம் வரவில்லை. அப்படி வாாததற்கு என்ன காரணமோ வென்று ருக்குமணி சிறிது கலங்கினாள்.

மறுதினம் மாலை சுமார் 3 மணிக்கு ருக்குமணியை யாரோ ஒருவர் பார்க்க விரும்புவதாக வேலைக்காரன் தெரிவிக்க அவரை அழைத்துவரும்படி உத்திரவிட்டாள். அசல் வெள்ளைக்காரனைப்போல் உடுப்பணிந்துகொண்டு மிக வசீகர மான தோற்றமுள்ள சுமார் 25 வயதுடைய ஒரு வாலிபன் ருக்குமணியின் முன்வந்து நின்றான். ருக்குமணி அவனை வரவேற்று மரியாதையாகத் தன் எதிரில் உட்காரவைத்தாள். உடனே ருக்குமணியின் கையில் அவன் ஒரு கடிதத்தை எடுத் துக் கொடுத்தான்.

" ரங்காமானுஜம் அனேக வந்தனம். நான் சென்னைக்கு வருவதைப் பற்றி என் தந்தையார் தங்களுக்குத் தெரிவித் திருக்கலாம். நான் சீமையிலிருந்து புறப்படுமுன் அவருக்கு இன்ன கப்பலில் வருவதாக விபாமாக எழுதியிருந்தேன்.ஆனால் சில முக்கியமான வேலைகளைக் கவனிப்பதற்காக நான் இடை யில் இலங்கையில் தங்கி யிருக்கிறேன். என் வேலைகள் முடிந்த பின் வருகிறேன். இந்த லெட்டர் கொண்டுவரும் **Mr. சுந்தரவரதன்,** ஐ. வி. எஸ்., அவர்கள் சென்னைக்குப் புதியவர். சீமையில் என்னுடன் படித்துக்கொண்டிருந்த என் நண்பர். நான் சென்னை வந்து சேருகிறவரையில் நமது மாளி கையிலேயே அவர் தங்கியிருக்கட்டும். அவருக்கு வேண்டிய சௌகர்யங்களைச் செய்து கொடுக்கும்படி நான் தங்களை வேண்டிக் கொள்வதுடன், தங்களுக்கு இச்சிரமம் கொடுக் கும்படி நேரிட்டதற்காக மன்னிக்கும்படியும் கேட்டுக்கொள் கிறேன். மற்றவை நேரில்."

**ரங்காமானுஜம், ஐ. ஸி. எஸ்.**

ருக்குமணி கடிதத்தைப் படித்து முடிந்தபின் சுந்தரவா தனைக் கூர்ந்து கவனித்தாள். ருக்குமணியின் உத்திரவின் பேரில் வேலைக்காரர்கள் சுந்தரவாதனுடைய பெட்டிகள் படுக்கை முதலிய சாமான்களைக் கொண்டுவந்து வைத்தார்கள். முராஹரி விலாசத்தில் சுந்தரவாதன் தங்கியிருப்பதற்கு மிக வசதியாக ஓர் அறை ஒழித்துக் கொடுக்கப்பட்டது. சுந்தா வாதன் சென்னையைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு காலம் போக்கினன்.

சுந்தரவாதன் வந்தது முதல் ருக்குமணியின் மனம் ஒரு வாறு கலக்கமுற்றது. அவள் மனதில் எண்ணாத எண்ணங்க ளெல்லாம் எண்ணினள். பருவ காலத்திற்குரிய பஞ்சேந்திரியங் களின் வேட்கைகளும் அவளைத் தூண்டிவிடலாயின. வாலி பத்தன்மையும், வசீகரத்தோற்றமு முள்ள சுந்தரவாதனைப் பார்க்கப் பார்க்க மிக இன்பகரமான ஒரு ஆர்வம் உண்டாயிற்று. தனது கௌரவமான குடும்ப வாழ்க்கையை உத்தேசித்துக் கூடுமான வரையில் சுந்தரவாதனைப் பார்க்காமலிருக்க முயற்சி செய்தாள். முடியவில்லை. அவளை யறியாத ஓர் வகைச் சக்தி யால் தூண்டப்பட்டு அவனைக் கண் குளிரப் பார்ப்பதில் ஒரு விதமான ஆனந்த மடைந்தாள். அவள் மனம் குழம்பியது. சிந்தை தடுமாற்றமடையலாயிற்று. இன்பத்திற்கும் ஆசைக்கு மிடையில் ஒரு புதிய உணர்ச்சி தோன்றி அவள் உள்ளக் கிளர்ச்சியை அதிகப் படுத்தலாயிற்று. ஆசையும், ஆனந்த மும் அவள் மனதில் குடியேறின. அவளது அகத்தில் சத் தியத்திற்கும், சதிக்கும் பெரும் போர் நிகழ்ந்தது. தனது சத்திய சோதனைக் காலம் வந்திருப்பதாகக் கருதினள். அவள் மனம் நன்மைக்கும் தீமைக்குமாக ஊசலாடிக்கொண்டிருந் தது. இந்நிலையில் 10 தினங்கள் கழிந்தன.

# அத்தியாயம் 2.

## காதலின் ருசி—நடு நிசியில் படுகோலை.

நாகரீக முன்னேற்றமடைந்த இந்த இருபதாம் நூற்ருண்டில் சென்னையம்பதியின் கடற்கரைக்கு மாலை நேரத்தில் சென்ருல் நடை உடை அலங்காரங்களில் நமது பாத கண்டம் எவ்வளவு தூரம் முன்னேற்ற மடைந்திருக்கின்றதென்பதைத் தெரிந்து கொள்ளலாம். விதவிதமான மோட்டார் வண்டிகள் மிக ஒழுங்காக நிருத்தி வைக்கப்பட்டிருக்கும் நேர்மையும், "Beach drive" என்று சொல்லப்பட்ட மிதமான வேகத்தில் கடற்கரை ரஸ்தாவில் மோட்டார் வண்டிகள் ஓடிக் கொண்டிருக்கும் காட்சியும், ஸ்திரி புருஷர்கள் கூடுமான வரையில் நாகரீக அலங்காரத்துடன் கைகோர்த்து உலாவுகின்ற விநோதமும் மிக மனோகரமாக இருக்கும். மீன் கண்காட்சி சாலைக்கெதிரில் அமைக்கப்பட்டிருக்கும் "ஆகாசவசனி" யின் பாட்டுகளை அனேகர் கேட்டுக்கொண்டிருப்பார்கள். சில வாலிபர்கள் காதல் ரஸமான ஒரு நூதன நிகழ்ச்சியை எதிர்பார்த்து மேரி கலாசாலையைச் சுற்றி வருவார்கள். சென்னை வாசிகளின் பொழுது போக்கில் கடற்கரை காலட்சேபம் அதி முக்கியமானது.

ருக்குமணி மோட்டார் வண்டி ஓட்டுவதில் மிக சமர்த்தியவதியாளுள். அன்றாடம் சௌகர்யம் போல் தனிமையாகவோ அன்று தன் சினேகிதைகளுடனே ருக்குமணி கடற்கரைக்கு வருவது வழக்கம். ருக்குமணியின் நாகரீக அலங்கார ஆடம்பரம் அன்றாடம் வெவ்வேறு விதமாக மாற்றப்படும். நீண்ட கூந்தலைத் தினம் ஒருமாதிரியாக ஜடைபோட்டுக் கொள்வாள். இவளைப் பார்த்தால் பார்பனப்பெண் என்று எவராலும் அறிந்துகொள்ள முடியாது. !நேத்திரானந்தமாக அழகைக்கண்டு ஆனந்திப்பதில் திருப்தியடைந்து அதற்காகச் சிரமப்படும் சில நண்பர்கள் ருக்குமணியின் கம்பீரமான

தோற்றத்தைக் கண் கொள்ளாச் சேவையாகக் கண்டு களிப் பதற்காகவே கடற்கரையில் வந்து நின்று காத்துக்கொண்டிருப் பார்கள்.

ருக்குமணி தன்னந்தனிமையாக மோட்டார் வண்டியி லிருந்து இறங்கினாள். அவளது ஒப்புயர்வற்ற அழகை மிக நாகரீகமான அவளது உடை அலங்கரித்துக் காட்டிற்று. உருக்கு முகத்தில் ஒளி வீசும் அபரஞ்சித் தங்கம்போல் பள பளவென ஜொலிக்கும் தேஜோமயமான அவளது சரீர காந்தியை| அவளணிந்து கொண்டிருந்த மிக மெல்லியதான நீல வர்ணப் பட்டாடை அதிகப் படுத்திற்று. அரை பாடி ஜாக் கெட்டின் கீழ் தெரிகின்ற மழமழப்பான புஜங்கள் கண்களைக் கவரத்தக்க காட்சியா யமைந்திருந்தன. அவளது மிளிரும் கண்ணொளியும், காதுகளிலணிந்திருக்கும் பட்டை தீட் டிய வைரக்கற்களின் பேரொளியும் ஒன்று சேர்ந்து அந்தி வெயிலில் பிரதிபிம்பிக்கப்பட்டு பளிச்சு பளிச்சென்று மின்ன லைப் போல் ஒளி வீசின. சதைப்பற்றினால் உருட்சியடைந்த அவள் கன்னங்களில் தண்ணீர்ச் சுழல்கள் போன்ற சிறு குழிகள் ஏற்பட்டு இயற்கையாயமைந்த இனிய புன்முருவலையுடைய அவளது முகத்தைப் பின்னும் பின்னும் வசீகரமாக்கிக் காட்டின.

கடற்கரையில் ஜனக்கூட்டமில்லாத ஒரு ஏகாந்த இடம் தேடி சவுக்கு மரங்களுக்கிடையில் ருக்குமணி தனிமையாக உட்கார்ந்து மனோராச்சியம் செய்துகொண்டிருந்தாள்.

"அலோ மேடம்! (Alo Madam) நான் இங்கு வந்தது தங்க ளுடைய ஏகாந்தத்திற்கு இடையூறாகுமோ," என்று கூறிக் கொண்டே சுந்தரவரதன் அவள் எதிரில் வந்து உட்கார்ந்து 'தங்கள் அன்பிற்கு நான் என்ன கைம்மாறு செய்யமுடியும். சென்ற 10 தினங்களாக எனக்கு நடந்த உபசாரங்களைப் பற்றி நான் பெரிதும் மகிழ்ந்தேன். நான் பிறந்தது இத்தேசமா

யினும் வெகு பால்ய முதல் சீமையிலேயே படித்துக்கொண்டி ருந்துவிட்டபடியால், மேல்நாட்டு நாகரீகத்தைவிடக் கீழ் நாட் டின் நாகரீகமும் அனுஷ்டானங்களும் இங்கு மிக உயர்வாகக் காணப்படுகின்றன. ஆனுல் நான் சென்னைக்கு வந்ததிலிருந்து ஒரு விஷயம் மட்டில் நான் கேள்விப்பட்டவரையில் என் மனதைப் புண்படுத்திவிட்டது. தங்களைப் பொருத்தவரையில் ஆலோசித்துப் பார்த்தால் மேல்நாட்டில் இத்தகைய அசம்பா விதமான விவாகங்கள் நடைபெறுதல் அசாத்தியம். பெண் களின் சுதந்திர விஷயத்தில் நமது நாடு மிகவும் பிற்போக்கான நிலைமையிலிருக்கிறதென்பதை நான் பிரத்தியட்சமாக அறிந்து கொண்டேன். சிறுமிகள் வயோதிகர்களின் காமாந்தகரமான இச்சைக்கு அநீதியாகப் பலியிடப்படுகின்றுர்கள். இவ்வாறு தம் பெண்களின் வாழ்நாளை விருதாவாக அழிக்கின்ற கொடிய பெற்ருேர்களிருக்கும் வரையில் இத்தேசம் முன்னேற்ற மடைவதெங்ஙனம்? சமூக சீர்திருத்தங்களில் இந்தியர்கள் இன்னும் எவ்வளவோ முன்னேற்றமடைய வேண்டும். தங்கள் இல்வாழ்க்கையைப்பற்றி நான் கேள்விப்பட்டவரையில் தங்க ளிடம் நான் அனுதாபம் கொள்ளாமலிருக்கமுடியாது. சீமை யில் பெண்களுக்குத் தங்கள் மனதிற் கேற்ற காதலர்களை விவாகம் செய்துகொள்ள உரிமை இருக்கிறது. அவசிய மேற் பட்டால் அவர்கள் விவாகத்தை ரத்து செய்துகொண்டு புனர் விவாகமும் செய்துகொள்ளலாம். இந்த நாட்டைப்போல் "தலைவிதி" என்று முடிவு செய்துவிட வேண்டியதில்லை" என்று கூறி ருக்குமணியை மிக அன்புடன் பார்த்தான்.

இருவர் கண்களும் ஒன்றையொன்று சந்தித்து வந்தனம் செய்துகொண்டன. தன் நிலை சிறிது கலங்குதலைக் கண்டு ருக்குமணியின் சரீரமெல்லாம் நடுங்கிற்று. இருதயம் பட பட வெனத் துடித்தது. காந்தக் கல்லினுல் இழுக்கப்பட்ட ஊசி யைப்போல் சுந்தரவரதனுடைய அழகிய தோற்றத்தினுல் அவள் மனம் இழுக்கப்பட்டு ஒழுக்கத்திலிருந்து தடுமாற்ற

மடையலாயிற்று. "உலகத்திற்கே நகைப்பிற் ,கிடமான ஒரு பெரிய தகாத காரியத்தில் நாம் பிரவேசிக்கலாமா?'' என்று அவள் நினைத்த மாத்திரத்தில் அவள் மனம் சோர்ந்து அப்படியே மூர்ச்சையாகி சுந்தரவரதன் மடியின்மீது சாய்ந்துவிட்டாள்.

மிக மனோகரமான கடற்கரை உப்பங்காற்று ஜில்லென வீசுகின்றது. மனதிலடக்கமுடியாத காதலுணர்ச்சிகளைத் தட்டி எழுப்பக்கூடிய காட்சிகள்.! இவை எல்லாம் ஒன்று சேர்ந்து இருவரையும் எற்கனவே கலக்கியிருந்தபடியால்—தன் மடியின்மீது சாய்ந்த ருக்குமணியை சுந்தரவரதன் இருகத் தழுவிப் பவழம்போன்ற செவ்விதழ்களில் ஒரு முத்தம் கொடுத்தான். மறுவினாடியிலேயே அம்முத்தம் இரண்டாகத் திருப்பிக் கொடுக்கப்பட்டது. வயோதிகருக்கு வாழ்க்கைப்பட்டதினால் காதலின் ருசியை ருக்குமணி இதுகாறும் அறியவில்லையாதலால் அந்நேரத்தில் அவள் அடைந்த ஆனந்தம் அளவுகடந்ததாயிருந்தது. தனது ஜென்மம் வீணாகவில்லை என்பதை அறிந்துகொண்டாள். கொஞ்சிக் குலாவக்கூடிய வாலிப நிசையில், வயோதிகருடைய வறண்ட சரீரத்தின் ஸ்பரிசத்திற்கும்,கட்டமைந்த ஒரு வாலிபனுடைய சரீர ஸ்பரிசத்திற்குமுள்ள வேற்றுமையை ருக்குமணி தன் ஆயுளில் முதல் தடவையாக அப்போதுதான் அறிந்தாளாகையால், மடவிறுகச் சுந்தரவரதனை அப்படியே கட்டிப் பிடித்துக்கொண்டாள். ஒரே ஒரு முத்தம்! ஒரே ஒரு விநாடி ஆலிங்கனம்! அதற்குள் இவர்களிருவரும் இவ்வுலகில் இதுவரையில் கண்டிராத பெரிய சுகத்தைக் கண்டுவிட்டார்கள்.

கடற்கரையில் பகிரங்கமான அந்த இடத்தில் அதற்குமேல் அவர்கள் என்ன செய்யலாம் ? இருவர் மனதிலும் எழும்பிய காதலுணர்ச்சியானது ஸ்பரிச விசேஷத்தால் தூண்டப்பட்டு அவர்கள் சரீரத்தில் என்றுங் கண்டிராத ஒரு புளகாங்கித உற்சாகத்தை உண்டாக்கிற்று. சுந்தரவரதனுடைய ஒப்புயற்

வற்ற ஒய்யாரமான தோற்றமும், முகவசீகரமும், கருணை ரசம் ததும்பும் கண்களும், புன்னகை தவழ்ந்த முகமும், கட்டமைந்த சரீர வண்மையும், ருக்குமணியின் மனதை அடியோடு கவர்ந்துவிடவே "இவனன்றோ கட்டழகன்" என எண்ணி அவன் தகாத வழியிலிறங்க எத்தனித்துவிட்டாள்.

"ருக்குமணி! இவ்வுலக நிந்தனைக்கு நாமிருவரும் ஆளாகப் போகின்றோம் என்பது நிச்சயம்! காதலின் ருசியைக் கண்ட நாம் இனி அதை அனுபவிக்காமலிருக்க முடியுமா? நாம் என்ன செய்வது" என்று சுந்தரவாதன் மிகத் தடுமாற்றத்துடன் கேட்டான்.

"நான் பெண் ஜென்மமெடுத்த காலத்திலேயே என் தலையில் கோணலான எழுத்து போடப்பட்டிருப்பதை நானறிந்து கொண்டேன். இன்னும் எது வரினும் அதைத் தாங்கக்கூடிய திறமை எனக்கிருக்கின்றதென்பது நிச்சயம். எனக்கு மனோ சக்தி உண்டாய்விட்டது. எதையும் நான் பொருள்படுத்தவே மாட்டேன். என் வாழ்நாள் வீணுளாகத் தலைவிதி வசத்தால் மாற்றப்பட்டபின் நான் திடசாலியாக மாறிவிட்டேன்" என்று ருக்குமணி தைரியமாகப் பதிலுரைத்தாள்.

மாலை 8 மணிவரையில் இருவரும் கடற்கரையில் உல்லாசமாகப் பேசிக்கொண்டிருந்துவிட்டு அதற்குமேல் மாளிகைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். அதுமுதல் காதல் உலகத்தில் இளவயதுள்ள ஒருகட்டகழனும் கட்டழகியும் அனுபவிக்கக்கூடிய இன்ப வகைகளில் அவர்கள் எதையும் பாக்கி வைக்கவில்லை. ஆனால் இந்த நேசப்பான்மை மிக ரகசியமாக நடைபெற்று வந்தது.

இத்தகைய பேரானந்தக் கடலில் மூழ்கி மெய்மறந்து சுக துக்கம் என்ற இவ்வுலக வாசனை அனைத்தையும் இவர்கள் மறந்திருக்கையில் சிறையிலிருந்து விடுதலைபெற்று மறுதினம் சென்னைக்கு வருவதாக ராகவாச்சாரியாரிடமிருந்து ருக்குமணிக்கு ஒரு கடிதம் வந்தது. உலக இன்பத்தில் உன்னத

ஸ்தானத்தில் ஏறி யிருந்த ருக்குமணி இக்கடிதம் கண்டவுடன் மனக்கிலேசமடையாமலிருக்க முடியுமா ? கிழப்பிணம் வேறு எங்கேயாவது தொலேகிறவரையில் தன் பிராணகாந்தனே எப்படிப் பிரிந்திருப்பது என்று கிலேசப்பட்டாள். சுந்தரவாதன் அவளுக்குத் தேருதல் கூறி, ஆச்சாரியார் மாளிகையிலிருக்கும்போது தான் விலகி யிருப்பது நலமென்று கருதி பஸோட்டா (Basota) ஓட்டலுக்குப் போய்விட்டான்.

இரண்டு மாதகாலம் சிறை வாசத்திலிருந்து ராகவாச்சாரியார் வீடு வந்து சேர்ந்தார். கூடுமானவரையில் மனே அமைதியுடன் ருக்குமணி அவரைச் சந்தோஷமாக வரவேற்று உபசரித்தாள். சீமையிலிருந்து வரவேண்டிய ரங்காராமானுஜத்தின் தகவல்களேப்பற்றி ருக்குமணி ஏற்கனவே ஆச்சாரியாருக்குக் கடிதம் மூலமாகத் தெரிவித்திருந்தாளாதலால் அதைப்பற்றி அவர் ஒன்றும் கேட்கவில்லே. ஆனல் தன் மகனுடைய நண்பனுகிய சுந்தரவாதன் எங்கே என்று கேட்க, சுமார் நாலேந்து தினங்களுக்கு முன் அவன் மதுரைக்குப் போய்விட்டதாக ருக்குமணி பதிலுரைத்தாள். ஆச்சாரியார் அதை நம்பினர். தனது வாலிப மனேவியிடம் ஆச்சாரியார் மிகச் சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருந்தார். கற்பிழந்த நங்கையர்களுக்குச் சாகஸங்கள் தாமே உதிப்பது இயற்கை. ருக்குமணி தனது சாகஸங்களினுலும், கண்வெட்டுகளாலும், புன்சிரிப்புகளாலும், மதுர வசனங்களாலும், வயோதிகரை மெய் மறந்திருக்கும்படி செய்துவிட்டாள். இந்த ஆனந்த மேலீட்டால் ஆச்சாரியார் தப்பித்தவறி ருக்குமணியின் மீது கையைப் போட்டுவிட்டால், அந்த வறட்சியடைந்த கையின் ஸ்பரிஸத்தால் ருக்குமணி அருவருப்படைந்து வேறு வழியில் பேச்சைத் திருப்பி ஆச்சாரியாரை மயக்கி அவரை யறியாமல் அக்கையை அப்பால் தள்ளிவிடுவாள்.

வயோதிகர்கள் தங்கள் வாலிபக் காதலிகளிடம் தமது பிரபாவங்களேப்பற்றிப் பேசிக் காலந்தள்ளுவதில் வெகுவாய்

ஆசைப்படுவார்கள். அதன்படி ஆச்சாரியாரும் ருக்குமணியிடம் தனது பிரசங்க ஆர்ப்பாட்டங்களைப் பற்றியும், ஊர் ஊராகத் தனக்கு ஏற்பட்ட வரவேற்பு ஊர்வல வைபவங்களைப்பற்றியும், தனது சிறைவாசத்தைப்பற்றியும் தற்பெருமை பேசினார். காங்கிரஸ் பெயரையும், கதரின் பெயரையும் சொல்லித் தான் இதுவரையில் இருபது லட்சம் வரையில் சமபாதித்துக் கொண்ட சாமர்த்தியத்தைப்பற்றி ஆச்சாரியார் தன்னைத் தானே பாராட்டிக்கொண்டார். இந்நிலையில் இருவாரங்கள் கழிந்தன.

மாலை 7 மணி சுமாருக்கு "பம்பாய் யுத்த சபையிலிருந்து ஒரு முக்கியமான காரியத்தைப்பற்றி ஆலோசிப்பதற்காக உடனே புறப்பட்டு வரும்படி" ஆச்சாரியாருக்கு ஒரு தந்தி வந்தது. 3 மாத காலமாகத் தமது மனைவியைப் பிரிந்திருந்த ஆச்சாரியார் மறுபடியும் ருக்குமணியை விட்டு விலக நேரிட்டதே என்ற வருத்தத்துடன் ரயிலுக்குப் பிரயாணமானார். ஆச்சாரியார் அப்பால் சென்றவுடன், சனி ஒழிந்தது, என்று சந்தோஷத்துடன் ருக்குமணி சுந்தரவாதனுக்குச் செய்தி அனுப்ப, சுந்தரவாதன் உடனே வந்து சேர்ந்தான். அன்றிராப்போஜனம் முடிந்தவுடன் ருக்குமணியும் சுந்தரவாதனும் மாளிகையின் உப்பரிகையிலுட்கார்ந்து அதி உல்லாசமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

ஆச்சாரியார் பம்பாய் மெயிலில் ஏறினார். பல தொண்டர்கள் அவருக்கு மலர் மாலை சூட்டி "ஜே!", போட்டு வந்தனோபசாரத்துடன் ரயிலேற்றிவிட்டார்கள். பம்பாய் யுத்த சபைக்கு ஆச்சாரியார் திடீரெனப் புறப்படவேண்டியகாரணத்தையறிய பத்திரிகைப் பிரதிநிதிகள் ஆசைப்பட்டார்கள். ஆனால் "தற்போது அதை வெளியிட முடியாது" என்று ஆச்சாரியார் அவர்களுக்குப்பதிலளித்துவிட்டார். "வந்தேமாதரம்!" என்ற முழக்கத்துடன் பம்பாய் மெயில் புறப்பட்டு விட்டது. சுமார் 50 மைல் வரையில் ஆச்சாரியார் முதல் வகுப்பு வண்டியில்

பிரயாணம் செய்தார். இதற்குள் பதினாயிரம் தடவை அவர் ருக்குமணியை நினைத்துக்கொண்டார். புன்னகை தவழ்ந்த முகத்துடன் ருக்குமணி அவர் எதிரில் நிற்பதுபோலிருந்தது. கண்டவர் வியப்படையும்படி நீண்டு, பரிமளித்து, நெய்த்து, இருண்டு, சுருண்டு, வளையும் வளையமாக நெற்றியில் பாதி வரையில் மறைத்துக்கொண்டு, மிக அலங்காரமாகத் தொங்குகின்ற அவளது கூந்தலையும், அம்புபோல் ஊடுருவிப்பாயத் தக்க பார்வையையுடைய நெடிய விழிகளையும், வாரிட்டு விம்மிப் புடைத்திருகி. இளகி மணி மார்பிடமெல்லாம் கவர்ந்து வட்டமிட்டடியிட்டுத் தன் தலைவணங்காமற்றிரண்டிருக்கும் பயோதரங்களின் வனப்பையும், வயோதிகரான ஆச்சாரியார் ஒன்றின்பின் ஒன்றாக ஞாபக மூட்டிக் கொண்டார். அச் சமயம் ருக்குமணியின்மீது அவருக்கு ஏற்பட்ட ஆசை அடங்கக்கூடியதாயில்லை. அவருடைய தேசபக்தி யெல்லாம் பறந்தோடிவிட்டது. பாரத மாதாவின் கைங்கர்யத்திற்காகத் தான் போவதையும் மறந்தார். இந்நிலையில் புகைவண்டி ஒரு ஸ்டேஷனில் வந்து நின்றது. அதற்கு முன்னதாகவே சென்னைக்குப் போகக்கூடிய மற்றோர் புகைவண்டி எதிர் கொண்டு நிற்பதைக் கண்டு, உடனே அந்த வண்டியில் ஏறிச் சென்னைக்குத் திரும்பி வந்து விட்டார். ஆச்சாரியார் சென்னை வருவதற்கு இரவு 12 மணியாயிற்று.

இவ்வாறு ஆசையுடன் தன் மனைவியைப் பார்ப்பதற்காகத் திரும்பி வந்தவர், வீட்டிலுள்ள வேலைக்காரர்கள் எவரு மறியாமல் திடீரென ருக்குமணியின் முன்னால் சென்று அவளைத் திடுக்கிடும்படிச் செய்து பரிகசிக்க வேண்டுமென நினைத்துச் சந்தடி செய்யாமல் வெளிப்புறத்திலிருந்த சுற்றுப் படியிலேறி மாளிகையின் உப்பரிகையை யடைந்தார்.

இச்சம்பவத்தை எதிர்பாராமல் ருக்குமணியும் சுந்தரவாதனும் காற்றுக்காக உப்பரிகையின் வெளிக் கூடத்தில் ஒரு கட்டிலின்மீது படுத்திருந்தார்கள். ராகவாச்சாரியார்

குறும்புக்காக மின்சார விளக்கை ஏற்றினர். திடீரென வெளிச்சம் பிரகாசிக்க ருக்குமணியும் சுந்தரவரதனும் திடுக்கிட்டு எழுந்தார்கள்.

ராகவாச்சாரியார்இக்காட்சியைப் பார்த்துத் திடுக்கிட்டு "ஆ! இது உண்மைதானு? நம்பமுடியாது! நம்பமுடியாது! எனது ரங்......................................................" என்று கோபத்துடன் கூறுகையில், "இனி என்ன செய்யலாம்! காரியம் மிஞ்சிவிட்டது. நான் தப்பித்துக்கொள்ள என்ஞல் செய்யக்கூடியது இதுதான்" என்று கூறி சுந்தரவாதன் ஒரு கட்டாரியினுல் ராகவாச்சாரியின் மார்பில் குத்தி அவர் "ஆ!" என அலறுமுன் சந்தடி ஏற்படாமலிருப்பதற்காக அவர் வாயைக் கெட்டியாக அமுக்கிப் பிடித்துக்கொண்டான். இக்கோர சம்பவத்தைக் காண்பதற்கஞ்சி ருக்குமணி மின்சார விளக்கை யணைத்துவிட்டாள். இப்படுகொலை நடு நிசியில் சந்தடியில்லாமல் நடந்துவிட்டது.

"ருக்குமணி! உன்மீதுள்ள அளவு கடந்த ஆசையினுல் நடு நிசியில் இப் படுகொலையைச் செய்துவிட்டேன். நல்லகாலமாக ஆச்சாரியார் திரும்பி வந்தது. மாளிகையில் யாருக்கும் தெரிந்திராது. ஆதலால் இந்தப் பழி நம்மை யணுகாவண்ணம் நாம் ஆச்சாரியார் சரீரத்தை அப்புறப் படுத்திவிட்டால் நாளையதினம் இவரது மரணத்திற்குத் தானே கதை ஏற்பட்டுவிடும். இக்கொலைக் குற்றத்திலிருந்து நாம் தப்பித்துக்கொள்ள ஒருவருக்கொருவர் உதவி செய்துகொள்ள வேண்டும்" என்று சுந்தரவரதன் கூறி ஆச்சாரியாரின் சரீரத்தைத் தோள் மீது தூக்கிக்கொண்டு மாடியை விட்டுக் கீழே இறங்க, ருக்குமணி சந்தடி செய்யாமல் பின் பற்றினுள். மாளிகையின் பின்புறத்தில் நின்றுகொண்டிருந்த மோட்டார் வண்டியில் ஆச்சாரியாரின் சரீரம் வைக்கப்பட்டது.

"ருக்குமணி! நீ கவலைப்படாமலிரு. இனி நான் பார்த்துக்கொள்கிறேன். இவ்வுலகில் எவரும் சந்தேகிக்க முடி

யாத வழியில் ஆச்சாரியாரின் மரணம் நாளையதினம் வெளியாகப் போகின்றது. அச்சமயம் என்னுடைய சாமர்த்தியத்தை நீ யறிந்துகொள்வாய்'' என்று கூறிக் கட்டியணைந்து ருக்குமணிக்கு இரண்டொரு முத்தங்கள் கொடுத்துவிட்டுச் சந்தடி செய்யாமல் மோட்டார் வண்டியை ஓட்டிக்கொண்டு புறப்பட்டான்.

நிலா வெளிச்சத்தில் அப்பயங்கரமான மோட்டார் வண்டி—தன் வாழ்க்கைத் துணைவரை ஏற்றிக்கொண்டு போகின்ற அப்பயங்கரமான மோட்டார் வண்டி—கண்ணுக்கு மறைகிறவரையில் ருக்குமணி பார்த்துக்கொண்டு நின்றாள். கொலை பாதகனுகியபின் சுந்தரவரதன் கொடுத்த முத்தம் ருக்குமணியின் சரீரமெங்கும் ஒருவகை நடுக்கத்தைக் கொடுத்தது. தள்ளாடித் தள்ளாடி மாடியின்மீது ஏறி "ஆ! பகவானே ! இப்படியா முடிந்தது'' என்று கூறிக்கொண்டே மூர்ச்சித்து வீழ்ந்தாள்.

---

## அத்தியாயம்—3.

### தகாத செய்கை—மர்மம் வெளியாயிற்று.

### தேசபக்தர் திவான்பகதூர் ராகவாச்சாரியாரின் மரணம்.

"சென்னைக்கும் அரக்கோணத்திற்கும் மத்தியில் நேற்றிரவு சென்னையிலிருந்து பம்பாய்க்கு முதல் வகுப்பு வண்டியில் யாத்திரை செய்துகொண்டிருந்த ஆச்சாரியார் எப்படியோ திடீரெனத் தவறிவிழுந்து பலமான அடிபட்டு இறந்துபோனார். அடிபட்ட வேகத்தால் அவரது முகம், மார்பு, முழங்கால்கள் இவற்றில் பலமான காயங்களேற்பட்டிருக்கின்றன. நேற்றிரவு பம்பாய் மெயிலில் பல தேசபக்தர்களும், தொண்டர்களும் சேர்ந்து மிக ஆடம்பரமாக அவரை ரயிலில் ஏற்றினர்கள். பம்பாய் யுத்தசபையாரிடமிருந்து வந்த ஒரு அவசரமான தந்தியைக்கண்டு அவர் பம்பாய்க்குப் பிரயாணப்பட்டதாக

அறிகின்ருேம். ஆச்சாரியாரின் மரணத்தினுல் நமது தாய் நாடு இணையற்ற தேசபக்தர் ஒருவரை இழந்துவிட்டது. அவரது ஆத்மா சாந்தியடையட்டும். அவரது மனைவியார் ஸ்ரீமதி ருக்குமணியம்மாளுக்கும், மகன் ஸ்ரீமான் ரங்காராமானுஜம், ஐ. ஸி. எஸ். அவர்களுக்கும் நமது அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கின்ருேம்'' என்று சமாசாரப் பத்திரிகைகளில் ஒரு விஷயம் வெளியாயிற்று. பிரபல தேசபக்தரான திவான் பகதூர் ராகவாச்சாரியார் மரணமடைந்த செய்தி தேசமெங்கும் பரவியது. அனைவரும் எதிர்பாராத விதமாகத் திடீரென ஏற்பட்ட இப்பெரிய துக்கத்திற்காக அவர் தேசத் தொண்டுகளைப் பாராட்டி அனுதாபப்பட்டார்கள். இச்சம்பவம் நிகழ்ந்த சில தினங்களில் ரங்காராமானுஜம் இலங்கையிலிருந்து சென்னை வந்து சேர்ந்தான். தன் தந்தையின் மரணத்தைப்பற்றி மிகுதியும் வருந்திய அவனுக்குப் பலர் ஆறுதல் கூறினுர்கள். ராகவாச்சாரியின் அளவற்ற செல்வங்களுக்கு அவரது ஏக புத்திரனுகிய ரங்காராமானுஜம் அதிபனுனன்.

ஆச்சாரியாரின் மரணத்திற்குப் பின் ரங்காராமனுஜம் தன் சிற்றன்னையாகிய ருக்குமணியைப் பார்த்ததே கிடையாது. ருக்குமணியும் அவனைப் பார்க்க விரும்பவில்லை. ருக்குமணி வெளியே புறப்படாமல் ஏகாந்தமான விடத்திலேயே இருக்கப் பிரியப்பட்டபடியால், ரங்காராமானுஜம் முராஹரி விலாஸ மாளிகையை ருக்குமணியின் வசத்தில் விட்டுவிட்டு மற்ருேர் மாளிகையில் வசித்து வந்தான்.

மூன்று மாதம் கழிந்த பின் ரங்காராமானுஜம் தன் தந்தை இறந்த வருத்தத்தை யொழித்து மனுேசாந்தி யடைதற்காகத் தேசயாத்திரையாகப் புறப்பட்டுவிட்டான். இந்தியாவிலுள்ள பிரதான நகரங்களை அவன் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

நீண்டகாலமாக மாளிகையில் அடைபட்டுக் கிடந்ததால் ருக்குமணி மனவெறுப்படைந்து மெதுவாக வெளியே புறப்பட

எத்தனித்தாள். வழக்கம்போல் கடற்கரை காலட்சேபங்களில் அவள் மனம் மறுபடியும் ஈடுபட்டது. அத்துடன் தன் குடும்பத்திற்கு அதிபனுகிய ரங்கராமானுஜம் சென்னையில் இல்லாததிலிருந்து ருக்குமணியின் இருதயம் பழய கதைகளை நாடிச் சென்றது, மற்ற பார்ப்பனக் கைம் பெண்களைப்போல் மொட்டையடித்து அங்கவிகாரம் செய்துகொள்ள ருக்குமணி இடங்கொடுக்க மறுத்துவிட்டாள். அவள் அழகு அப்படியே அன்றுடம் பெருகிக்கொண்டிருந்ததே யன்றிப் புருஷனிறந்த வருத்தத்தால் ஒரு சிறதளவேனும் குறைந்துவிடவில்லை. இவ்வாறு சில நாட்கள் கழிந்தன. கோடை காலம் வந்தது. ருக்குமணி கோடை காலத்தைப் போக்குதற்காக உதகமண்டலம் சென்றுள். ராகவாச்சாரியாருக்கு உதகமண்டலத்தில் ஒரு விஸ்தாரமான பங்களா யிருக்கின்றது. ஒரு பணிப்பெண்ணும் ஒரு சமையல் காரியும் ருக்குமணியுடன் சென்றுர்கள். உதகமண்டலம் சென்று நாலைந்து தினங்களாயின.

அதற்கப்பால் ஓர் தினம் அந்த பங்களாத் தோட்டத்தில் பசும் புற்றரையில் உட்கார்ந்து ருக்குமணி ஏதேதோ ஆலோசித்துக் கொண்டிருந்தாள். தனது பெற்றோர்களின் வருமை காரணமாக வரதட்சிணை கொடுக்கச் சத்தியில்லாமற்போனதினுல், தனக்குக் காலா காலத்தில் விவாகமாகாமற் போனதையும், வரதட்சிணை என்ற கொடிய பிராமணிய சம்பிரதாயத்தால் தன் வாழ்நாள் இவ்வாறு கெட்டு, ஒரு வயோதிகரை மணந்து, பின் நெறி பிறழ்ந்து, கடைசியாகத் தன் கணவன் தன் முன்னிலையிலேயே தன் காதலனுல் கொல்லப்பட்ட அனீதத்தையும் எண்ணி எண்ணிப் பார்த்து அவள் ஏக்கமடைந்தாள். ஒழுக்கத்தினின்றும் சத்தியத்தினின்றும் தவறியவளாகிய தன்னுடைய வருங்கால லட்சியம் என்ன ஆகுமோவென அவள் சிந்தை தடுமாற்றமடைந்தது.

ருக்குமணி இவ்வாறு குழம்பிய மனதுடன் பற்பலவிதமான எண்ணங்களில் மூழ்கியிருக்கையில் திடீரெனச் சுந்தர

வாதன் அவள் எதிரில் வந்து நின்றான். சுந்தாவாதனைக் கண்ட மாத்திரத்தில் ருக்குமணியின் மனதில் திகிலும், ஆசையும், வெறுப்பும் ஒன்றின்பின் ஒன்றாக உதித்தன. தனது மனோ எழுச்சிகளைக் காட்டிக்கொள்ளாமல் புன்னகையுடன் அவனை வரவவேற்றாள். சுந்தாவாதன் அவள் எதிரில் உட்கார்ந்து ருக்குமணியை ஆசையுடன் பார்த்தான். அன்று நடுநிசியில் சுந்தாவாதனுடைய ஈட்டி ராகவாச்சாரியார் மார்பில் தாக்கப்பட்ட குரூரமும் அவர் "ஆ!" என அலருமுன் அவருடைய வாயை அவன் கைகள் அமுக்கிய பயங்காத்தோற்றமும் ருக்குமணியின் மனக் கண்களில் புலனாக—அக்கொடிய சம்பவத்தை—எவ்விதத்திலும் அவளால் மறக்கமுடியாத அக்கொடிய சம்பவத்தை—நினைத்து உடல் நடுங்கினாள். அவள் உள்ளமும் நடுங்கிற்று. இருதயம் படபடவெனத் துடித்தது.

"ருக்குமணீ! உன்னைக் கண்டு நெடுநாளாய் விட்டது. என்னை மறந்து விட்டனையோ?" எனக்கூறிக் கொண்டே சுந்தாவாதன் ருக்குமணியின் கையை எட்டிப்பிடித்து "ருக்குமணீ! என் இப்படி உன் உடல் நடுங்குகின்றது" என்று வினவினான்.

"அன்று நடந்த அப்பயங்காமான சம்பவத்தை நான் மறப்ப தெங்ஙனம். அது முதல் உங்களைப் பார்க்கவே எனக்குப் பயங்காமாயிருக்கின்றது" என்றாள் ருக்குமணி.

"ஆம்! உண்மையே! ருக்குமணீ! என்னைப்பார்த்தால் நீ பயந்து நடுங்கவேண்டியது அவசியம்தான். நீ உள்ளன்புடன் காதலித்து நேசித்த பழய சுந்தாவாதனே — இப்பொழுது கொலைகார சுந்தாவாதனாக உன் எதிரிலிருக்கிறேன். ஆனால் அக்கொலை பாதகத்தை நான் செய்யத் துணிவுற்றது எதற்காக? நீ இன்னும் அறிந்து கொள்ளவில்லையா? ருக்குமணீ! நமது அன்பு மிகுந்த வாழ்விற்குத் தடையாயிருக்கக் கூடிய ஒரு இடையூற்றை நான் நீக்கிவிட்டேன். என் மானத்தைவிட

உன் மானத்தை நான் பெரிதாக மதித்தே அக்காரியம் செய்யத் துணிந்தேன். உனது அன்பின் நிமித்தம் இந்தக் கை இரத்தத்தில் தோய்க்கப்பட்டது. ருக்குமணீ! கொலே செய்தேன். அக்கொலேயையும் என் சாமர்த்தியத்தால் மறைத்து விட்டேன். நடு நிசியில் தன்னந்தனியனுக ஆச்சாரியாருடைய சவத்தை மோட்டார் வண்டியில் ஏற்றிப்போய் ரயில்வே ரஸ்தாவில் போட்டேன். அச்சமயம் என்னே யாராவது கண்டுபிடித்துவிட்டால் கண்டிப்பாய் நான் குற்றவாளியாயிருப்பேன். பின்பு என்முடிவு என்ன? எனக்குத் தூக்கு தெண்டனே கிடைத்திருக்கும். உன் ஆசையினுல் அத்தகைய பெரிய ஆபத்தையும் எதிர்பாராமல் எப்படியாளுலும் உன் மீது பழி ஏற்படக்கூடாதென்றே கருதினேன். "கொண்ட கணவனேக் கொலே செய்த பாதகி" என்று உலகம் உன்னே நிந்திக்கப் பார்த்திருக்க என்மனம் எப்படித் துணியும். இந்தக் கொலேயின் மர்மம் உன்னேயன்றி வேறு யாருக்கும் தெரியாது என்பது நிச்சயம். ஆதலால் நடந்துபோனதை நினேத்து இனி நாம் துக்கப்படுவதில் பயனென்ன? இவ்வாறு நீ துக்கமும் திகிலும் கொண்டால் நமது எதிர்கால வாழ்க்கை எங்ஙனம் முடிவது?" என்று சுந்தரவாதன் கேட்டான்.

எதிர்கால வாழ்கை என்று காதில் விழுந்தவுடன் ருக்குமணியின் மனதில் புத்துணர்ச்சி ஏற்பட்டது. தனது பிற்கால வாழ்கையைப் பற்றிய எண்ணங்கள் ஒவ்வொன்ருக எழும்பின. சுந்தரவாதனுடைய சொகுஸான தோற்றம் மறுபடியும் அவளே மயக்கலாயிற்று. உலக வாழ்க்கையில் மீண்டும் தான் இன்ப நிலேயை யடைய இனி வழியுண்டா? தனக்கு ஏதாவது விமோசனம் ஏற்படுமோ? என்று எண்ணித் தனது அம்புபோன்ற கண்களால் சுந்தரவாதனுடைய வசீகரமான முகத்தை ஆசையுடன் பார்த்து—

"ஆ! எதிர்கால வாழ்க்கையா?" என்று அளவுகடந்த ஆர்வத்துடன் ஒரு வினு நிகழ்த்தினுள்.

"ஆம்! இனி நமது இன்பகரமான வாழ்க்கைக்கு இவ வுலகில் எவ்வித இடையூறு மேற்படமாட்டாது. ஆதலால் நாமிருவரும் இனிமேல் சந்தோஷமாயிருக்கலாம்'' என்றான் சுந்தரவாதன்.

"அப்படியானால் என்னைத் தாங்கள் புனர் விவாகம் செய்துகொள்ளவும். அதற்கு எவ்வித இடையூறுமிரா தென்றே கருதுகின்றேன். அப்படி ஏதாவது மறுப்பு ஏற்பட்டாலும் நான் அவற்றைப் பொருள்படுத்த மாட்டேன். ரங்காராமானுஜம் சமுதாய சீர்த்திருத்த இயக்கத்தில் சம்மந்தப் பட்டவரெனப் பிரஸ்தாபம். ஆதலால் அவரும் இதை ஆட்சேபிக்கமாட்டார். நாளையதினமே நமது விவாகத்தைப் பதிவு செய்துகொண்டு நாம் பகிரங்கமாக வாழலாம்'' என்றாள் ருக்குமணி.

"ருக்குமணி! என் நண்பன் ரங்காராமானுஜத்தைப் போல் நானும் சீர்த்திருத்தக்காரன்தான். நாங்கள் சீமையி ருந்த காலத்திலேயே உனது விவாகத்தைப்பற்றிப் பத்திரிகை களில் பார்த்து உன்போன்ற ஒரு அழகிய இளமங்கையின் வாழ்க்கை அனீதமாக ஒரு வயோதிகரின் காமவெறிக்காகத் தியாகம் செய்யப்பட்டதைக்குறித்து மிக வருந்தினோம். எனது நண்பர் ரங்காராமானுஜம் தன் தந்தையினது அடாத செய்கை யை மிக வன்மையாகக் கண்டனம் செய்தார். இந்தியா விற்குத் திரும்பியவுடன், நீ உடன்பட்டால் இந்த விவாக பந்தத்தைச் சட்டமூலமாக ரத்து செய்துவிட்டு, உன்மனோ அபிப்பிராயப்படி உனக்குப் புனர் விவகாமும் செய்து வைக்கலாமென்று நாங்கள் ஆலோசித்தது முண்டு. விதவா விவாகத்தை முழுமனதுடன் நான் ஆதரிக்கக்கூடியவனே. ஆனால் உன்னைக் கலியாணம் செய்துகொள்வதற்கு மட்டில் முடியாது. அதற்குச் சில அந்தரங்க காரணங்களிருக்கின்றன. அவற்றை வெளிப்படையாகச் சொல்ல முடியாது'' என்றான் சுந்தரவாதன்.

"என்னைப் புனர்விவாகம் செய்துகொள்ள உடன்படா விட்டால் இனி நாமிருவரும் ஒருவரையொருவர் விரும்பு வது பயனற்ற செய்கையாகும். என்னைச் சந்திக்க முயற்சிக்க வேண்டாம். நாம் ஒருவரையொருவர் சந்தித்து வீணாக மனோ எழுச்சிகளைத் தூண்டிக்கொள்வது அபாயகரமாக முடியும். இதற்குமேல் நாமிருவரும் ரகசியமாக சம்மந்தப் பட்டிருக்க முடியாது. ஒரு விதவையின் ரகசிய வாழ்கை யால் ஏற்படக்கூடிய மான பங்கமும், சிசுஹத்தி, கர்ப்பபங்கம், முதலிய கொடுந் தொழில்களும் எனக்குக் கனவுத் தோற் றம்போல் தோன்றுகின்றன. அந்தோ! பரிதாபம்! நான் ஒரு கொலையைப் பார்த்த வரையில் போதும்! போதும்! எனது வருங்கால வாழ்க்கையை நினைக்க நினைக்க எனக்குப் பயங்கரமாயிருக்கிறது. அகௌரவமான வழி எதற்கும் நான் உடன்படமாட்டேன்" என்றாள் ருக்குமணி.

"ருக்குமணி! ருக்குமணி! அவ்வாறு முடிவான பதில் சொல்லிவிடாதே! உன்னைப் பிரிந்து ஒருக்கணமேனும் நான் இவ்வுலகில் உயிருடன் இருக்கமுடியாது. உன்னால் நிராதரிக் கப்பட்டால் எனது வருங்கால லட்சியம் கொடூரமான சம்பவ மாக முடியும். உன்னையின்றி நான் எப்படி மனோ அமைதி யுடன் வாழ்வேன்" என்றான் சுந்தரவாதன்.

"எதற்காக ஒளி மந்திரம். நான் எல்லாவற்றிற்கும் துணிந்துவிட்டேன். பகிரங்கமாக நாமிருவரும் விவாகம் செய்துகொண்டு வாழலாமே" என்றாள் ருக்குமணி.

"அதுதான் முடியாத காரியம். ருக்குமணி! உன் மானத் தைக் காப்பாற்றுதற்காக கொலை செய்யத் துணிந்தேன். உன் ஆசையால் படுகொலையும் செய்துவிட்டேன். உன்னைப் புனர் விவாகம் செய்துகொள்வதற்கு முடியாதென்றால் அதற்கு யாதாமொரு முக்கியமான காரணம் இருக்கவேண்டு மென்பதை புத்திசாலியாகிய நீ யூகித்துக் கொள்ளலாகாதா?" என வினவினான் சுந்தரவாதன்.

"அந்தக் காரணத்தைதான் நானறியவேண்டும். எப்படி யாயினும் இனி அகௌரவமான வாழ்க்கைக்கு உடன் படுவ தில்லை என்று சபதம் செய்துகொண்டேன். தங்களுக்கு அபிப்பிராய மிருந்தால் என்னை விவாகம் செய்துகொள்ள லாம். இல்லையேல் நமது நட்பு இத்துடன் முடியட்டும்" என்று ருக்குமணி கண்டிப்பாய்க் கூறினாள்.

"ருக்குமணி! உன்னை மணம் செய்துகொள்ளவும் முடி யாது. உன்னைப் பிரிந்திருக்கவும் முடியாது. இத் தர்ம சங் கடத்திற்கு நான் என்ன செய்வேன். இப்பொழுதே புறப்பட்டு என்னுடன் வந்துவிடு. உனக்காக நான் என் தாய் நாட்டைத் துறக்கின்றேன். அயல் நாடுகளுக்குச் சென்று அவ்விடத்தில் நாம் விவாகம் செய்துகொள்ளலாம். இந்த இந்தியா தேசத்தில் பிரசித்தி பெற்ற தேசபக்தராகிய திவான் பகதூர் ராகவாச் சாரியாரின் மனைவியாகிய உன்னை நான் — நான் — ஒருக் காலும் மறுமணம் செய்துகொள்ள முடியாது. அப்படி மணம் செய்துகொண்டால் நம்மை உலகத்தார் பார்த்து நகைப்பார்கள். உலகம் பூராவும் நம்மைச் சபிக்க ஆரம்பித்து விடும். அத்தகைய பயங்கரமான ஒரு மிகக் கேவலமான வாழ்கையை நீயாவது அல்லது நானாவது எப்படி விரும்ப முடி யும்? நமது விவாக எத்தனம் அபாய அறிவிப்பு என் பதிற் சந்தேகமில்லை. நாமிருவரும் மணம் செய்துகொள்ளக் கூடாத ஓர் ரகசியம் இருக்கின்றது. அந்த ரகசியத்தை அறிந்துகொள்ள ஆசைப்படாதே! என்னிடத்தில் ஏராள மான செல்வ மிருக்கின்றது. அதை எடுத்துக்கொண்டு நாம் எங்கேயாவது சென்று நிம்மதியாக வாழலாம்" என்றான் சுந்தரவாதன்.

"அந்த ரகசியம்தான் என்ன? அதை யறிந்துகொள் ளும் வரையில் என் மனம் சாந்தமடையாது. அதைக் கண்டிப் பாகத் தெரிந்துகொள்ளவேண்டும்," என்று ருக்குமணி கடுமையாகக் கூறினாள்.

"ருக்குமணி! ருக்குமணி! மறுபடியும் உன்னைப் பணி வுடன் நான் கேட்டுக்கொள்ளுகின்றேன். அந்த ரகசியத்தை—காமத்தால் தூண்டப்பட்டு என் மதியிழந்த அந்தக் கேவலமான—மிக மிகக் கேவலமான—ரகசியத்தை வெளியிடும்படி என்னை வற்புறுத்தாதே. இந்த உலகில் நான் கொலை செய்தது ஒரு பெரிய காரியமல்ல. அதைவிட மகா கொடியதாகிய மற்றோர் காரியம் செய்துவிட்டேன். அதை யறிந்தால் ஒருக்கால் உன் அன்பெல்லாம் கோபமாக மாறினாலும் மாறக்கூடும். இவ் வுலக முற்றிலும் என்னை நிந்திக்கும். சபிக்கும்! அத்தகைய கொடிய மர்மம் என் இருதயத்திலேயே புதைந்து கிடந்து என்னுடன் அழியட்டும்," என்று சுந்தரவாதன் மிகவும் பரி தாபகரமாகக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டான்.

"ஆனால் அந்த ரகசியம் உன்னுடனிருக்கட்டும். நமது நட்பும் இன்றுடன் முடியட்டும். என்னை மறந்துவிடு" என்றாள் ருக்குமணி.

"ருக்குமணீ! என்னால் உன்னை மறக்கவே முடியாது. ஒரு நிபந்தனையின்பேரில் அந்த ரகசியத்தை நான் வெளியிட்டு விடுகின்றேன். அந்த ரகசியத்தை யறிந்த பின் ஒருவாறு உன்மனோ நிலைமை மாறினாலும் மாறலாம். அது என்ன வாயினும் என்னை வெறுப்பதில்லை யென்று வாக்குத் தத்தம் செய்துகொடுப்பாயாக" என்று சுந்தரவாதன் கேட்டுக் கொண்டான்.

"அப்படியே யாகட்டும்!" என்று ருக்குமணி தலையை அசைத்தாள்.

"ருக்குமணி! திடுக்கிட்டுப் போகாதே! இவ்வுலகில் நீ இதுவரையில் கேட்டிராத ஒரு பயங்கரமான சரித்திரத்தைக் கேட்கப்போகின்றாய். உன் புருஷன் உன் கண்ணெதிரில் கொல்லப்பட்டதைப் பார்த்து நீ சகித்துக்கொண்டிருந்து விட்டாய். பெண்களுக்குரிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு

என்ற நால்வகை இயற்கைக் குணங்களும் உனக்கும் அவசிய மிருந்தே தீரவேண்டும். உன்ஞல் இக் கதையைக் கேட்டுக் கொண்டிருக்க முடியவே முடியாது. உன் புருஷன் ராகவாச் சாரியாருக்கு ரங்காமானுஜம் என்ற பெயருடன் ஒரு புத்திர னிருந்தானென்பதை நீ யறிவாய். அவன் சீமையில் ஐ.ஸி.எஸ். படித்துக்கொண்டிருக்கையில் 65 வயதடைந்த தன் தந்தையா கிய ராகவாச்சாரியாருக்கும் உனக்கும் விவாகம் நடைபெற்றதை யறிந்தான். சென்னை பத்திரிகைகளில் உன் அழகிற் சிறந்த புகைப்படம் பிரசுரிக்கப்பட்டதைப் பார்த்து இத்தகைய பேரழ குள்ள பாரத புத்திரி ஒருவளின் வாழ்நாள் தியாகம் செய்யப் பட்டதை நினைத்து உன்மீது மிக்க அனுதாபங் கொண்டான். பால்ய விவாகம், வரதட்சிணை முதலிய பிராமணீய சம்பிரதாயங்களை வெறுத்தான். இந்தியாவுக்குச் சென்றவுடன் எப்படியாவது தன் தந்தைக்குப் புத்திமதிகள் சொல்லி விவாக பந்தத்தை ரத்து செய்து உன்னை உன் மனோபீஷ்டப்படி புனர் விவாகம் செய்து கொடுக்கவேண்டுமென்று உறுதி யிட்டுக் கொண்டான். இவ்வளவு தூரம் உன் மீது அனுதாபங் கொண்டவரையில அவனை மகா உத்தமன் எனவே நீ கருத வேண்டும். ஐ. ஸி. எஸ். பரிட்சை முடிந்ததும் ரங்காமா னுஜம் தன் தாய் நாடு திரும்பினன். அவன் முடிவு விபரீத மாக முடிந்தது" என்று சுந்தரவாதன் கூறி வருகையில் ருக்குமணி இடை மறித்து—"நான் கேட்டதை விட்டு ரங்காமானுஜத்தின் கதையைச் சொல்லிக்கொண்டு போவ தேன். அதற்கும் இதற்கும் என்ன சம்மந்தம்," என்று வினவினள்.

"ருக்குமணி! ஆனல்—நீ—மிகவும் அவசரப்படுகின்ற மையால் என் ரகசியத்தை வெளியிடுகின்றேன். அதைக் கேட்க உன் மனதைத் திடப்படுத்திக்கொள்—நான்—உன் புருஷனைக் கொன்ற நானே—ரங்காமானுஜம். சீமையிலிருக்கையில் உன் புகைப் படத்தைப் பார்த்ததிலிருந்து உன் அழகில் ஈடு

பட்டு உன் அன்பைப் பெறுதற்காகவே சுந்திரவாதன் என்ற புனைப்பெயருடன் நடித்தேன். மதியிருந்தும் மங்கையர் மாய்கையால் மதியிழந்து மகா பாதகம் செய்தவன். "தந்தையும் தாயும் முன்னறி தெய்வம்" என்ற அருள் மொழிக்கு மாருகத் தந்தையைக் கொன்று அவர் மனைவியை மான பங்கம் செய்த சண்டாளன். இந்தப் பயங்கரமான ரகசியத்தை நீ என் அறிந்துகொள்ள ஆசைப்பட்டாய்" என்று கூறி முடித்தான் இதுவரையில் சுந்தரவாதனு யிருந்த ரங்கராமானுஜம்.

இதைக் கேட்ட மாத்திரத்தில் ருக்குமணியின் தலையில் பேரிடி விழுந்தது போலாயிற்று. அப்படியே உயிரற்ற பிணம் போல் மூர்ச்சித்துக் கீழே விழுந்தாள். ரங்காராமானுஜம் பயித்தியம் பிடித்தவனைப்போல் அவ்விடத்திலிருந்து ஓட்டமெடுத்தான்.

## அத்தியாயம் 4.

### பத்மாட்சி—மூர்த்தியின் நாடகம்.

பாதகண்டத்தில் பள்ளி எழுமுன் சுதந்திர நாதம் ஒலிக்கின்றது. சுயராச்சிய முரசு முழங்குகின்றது. தூய்மையான வெண் கதருடையும் காந்தி குல்லாயும் அணிந்த தொண்டர்கள் காண்போர் மனதைப் பரவசமாக்கக்கூடிய வீரகர்ச்சனைகளுடன் ஊர்வலம் வருகின்றூர்கள். அவர்கள் நகர மக்களைத் தட்டி எழுப்பி சுதந்திரப் போர்க் களத்திற்குத் தங்களைப் பின் பற்றும்படி அழைக்கின்றனர். அயல் நாட்டு சாமான்களைப் பகிஷ்கரிக்கும்படி ஜனங்களை மிக அன்புடன் வேண்டிக் கொள்கின்றனர். சுதந்திரப் போராட்டத்திற்குப் புறப்பட்டிருக்கும் இப்பாரத வீரர்களுக்கு ராணுவ பலங் கிடையாது. கத்தி, துப்பாக்கி, பீரங்கி, இவைகள் கிடையாது.காலாள்படை, குதிரைப்படை, பீரங்கிப்படை, கப்பற்படை, ஆகாயவிமானப்

படை, இவைகள் கிடையாது. பின் எந்த ஆதாரத்தைக் கொண்டு அவர்கள் இங்கிலீஷ் அரசாங்கத்தாரை எதிர்க்கப் புறப்படுகின்றார்கள்? மகாத்மா காந்தியின் உபதேசமாகிய சத்தியத்தை அடிப்படையாகக் கொண்ட அஹிம்ஸா தர்மத்தையே இவர்கள் கைகொண்டு மிக தைர்யமாக முன் அணியில் நிற்பதற்காகப் பிரயாணப்படுகின்றார்கள். அடங்கி நடந்து, அடங்கி நடந்து வெகுகாலமாக அடிமை வாழ்க்கையில் நசுங்கிக் கிடந்த இந்தியர்கள், வீராவேசங் கொண்டு விடுதலை யடையத் துணிந்துவிட்டது; அதிசயமன்று. சத்தியம் ஜெயித்து விடும் என்ற நம்பிக்கை அவர்கள் மனதில் குடியேறிவிட்டது. உலகம் போற்றும் உத்தமராகிய மகாத்மா காந்தி எதற்காகச் சிறையிலிருக்கின்றார். பாரத வீரராகிய ஜவஹரிலால் எதற்காகச் சிறையிலிருக்கின்றார்? உயிர், உடல், பொருள், மனைவி, மக்கள், அனைவற்றையும் துறந்து, பதினாயிரக் கணக்கான பாரத புத்திரர்கள் எதற்காகச் சிறையிலிருக்கின்றார்கள்? இது வரையில் எத்தனை பேர் இறந்தார்கள்? எத்தனை குடும்பங்கள் பாதவிக்கின்றன? இவ்வளவு பெரிய ஒரு நிகழ்ச்சி பயனற்றதாகுமா? இந்தியர்கள் அனியாயமாகப் போராட வில்லை. தங்களுக்குரிய உரிமையைத்தான் மன்றாடிக் கேட்கின்றார்கள். அடக்குமுறை பலாத்காரங்களும், தடியடித் தாண்டவமும், பல மற்ற இந்தியர்களை ஒருவாறு நசுக்கப் பிரயத்தனப்பட்டாலும், அவர்களுடைய மகா பரிசுத்தமான ஆத்ம சக்தியை அவைகளால் அழித்துவிட முடியுமா?

முற்காலத்தில் பாரத சகோதரிகள் போர் புரிந்ததாகப் பல சரித்திரங்கள் கூறுகின்றன. அதுபோல் இந்த இருபதாம் நூற்றாண்டில் இந்திய மாதருலகம் சுதந்திரப் போருக் கெழுந்திருக்கின்றது. இதுவரையில் எத்தனையோ வீர நங்கைகள் சிறையிலிருக்கின்றார்கள். சிறை சென்ற மங்கையர்கள் சிறையதிகாரிகளால் மிகக் கொடுமையாக நடத்தப்பட்டார்கள். இந்திய மங்கையர்கட்குக் கற்பே அணி. அக் கற்பின் அணியாகிய

மங்கல நாண் சிறைச்சாலை அதிகாரிகளால் அறுத்தெறியப் பட்டது. அவர்களுடைய கை வளையல்கள் உடைக்கப்பட்டன. நெற்றியில் அணியும் குங்குமத் திலகம் அழிக்கப்பட்டது. இக் கொடுமைகளை யெல்லாம் கண்டும் அவர்கள் சிறிதும் பின்னடையவில்லை. மென்மேலும் வீறு கொண்டெழுகின்றார்கள். பாம்பாய் நகரத்துக் கடைவீதிகளில் இந்திய மாதர்கள் நின்று அயல் நாட்டு சாமான்களை வாங்கவேண்டா மென்று மறியல் செய்யும் காட்சி சுத்தமான இரத்தமுள்ள எந்த இந்தியன் மனதையும் உருக்காமலிராது. மறியல் என்றால் அவர்கள் பலாத்காரமா செய்கின்றார்கள்? சண்டைக்கா போகின்றார்கள்? அவ்வீர சக்திகளின் கண்களினின்றும் எழுகின்ற சத்திய ஒளியே ஜனங்களை வசப்படுத்தி அவர்கள் ஆணைக்குக் கீழ் படியும்படி செய்கின்றது. அவர்களுடைய மறியலை யாராவது மீறித் துராக்கிருதமாக அயல் நாட்டு சாமான்களை வாங்கச் சென்றால் அம்மாதரசிகள் கடைக்கெதிரில் குறுக்கே படுத்துக்கொண்டு "எங்கள் மீது ஏறிச் செல்லுங்கள்" என்று தடுத்து விடுகின்றார்கள். அவ்வளவே! சக்தியின் முன்னும் சத்தியத்தின்!முன்னும் அதர்மம் என்ன செய்யக்கூடும்?

ஸ்திரிகளின் ஊர்வலம் மிக மனோகரமான காட்சி. பாரத தேவிகள் ஆரஞ்சி வர்ணமுள்ள கதர் உடையணிந்து கொண்டு நீண்ட கூந்தலை வெகு அழகாகப் பின்னிச் சடையிட்டுக்கொண்டு "இன்றே சதந்திரம் பெறுவோம் — இன்றேல் சமரில் இறப்போம்" என்ற இவைபோன்ற கருத்துகளையுடைய இனிமையான கீதங்களைப் பாடிக் கொண்டு, கையில் தக்ளியுடன் மிக நேர்மையாக ஊர்வலம் வருவார்கள். குயிலினும் இனிய இக் கானலோல காந்தாமணிகளின் இன்னிசையைக் கேட்டவுடன் பாரத நாட்டின் வீரசக்தி தானே ஆர்வங்கொள்கின்றது. "என் மகன் போரில் புறங்கண்டு இறந்திருந்தால் அவனுக்குப் பாலூட்

டிய முலையை அறுத்தெறிவேன்" என்று சீறி எழுந்த வீரத்தாய்மார் வாழ்ந்த இப் பாதகண்டம் இன்று சுதந்திரப் போரில் உயிர் துறக்க முன் வந்திருப்பது அதிசயமல்லவே!

வட இந்தியாவிலுள்ள உண்மையான தேசபக்தர்கள் இத்தகைய உன்னதமான சுதந்திர வேட்கையுடன் சுயராச்சிய யுத்தத்தில் ஈடுபட்டிருக்கையில், சென்னை மாகாணத்திலுள்ள காங்கிரஸ் பார்ப்பனர்கள் தேசீய நாடக மாடுகின்றார்கள். காங்கிரஸ் ஆதிக்கத்தைச் சென்னை பார்ப்பனர்கள் சிறிதுகாலம் கைப்பற்றிக்கொண்டு தலை கால் தெரியாமல் குதித்தார்கள். சட்ட சபைகளைத் தங்கள் வசமாக்கிக் கொண்டு ஆடாத ஆட்டமெல்லாம் ஆடி, நாட்டில் தங்களுக்குப் பெரிய செல்வாக்கை ஸ்தாபித்துக்கொண்டார்கள். இந்த நிலையில் காங்கிரஸ் சட்ட சபை பகிஷ்காரத் திட்டத்தை நிறைவேற்றியது. அதன்பின் பார்ப்பனர்களுக்கு காங்கிரஸில் என்ன வேலை. "மகாத்மா காந்தியின் கொள்கை சரியாயில்லை. மோத்திலால் நேருவின் கொள்கை நாட்டிற் கொவ்வாதது" என்று சமாதானம் கூறிவிட்டுத் தங்கள் காங்கிரஸ் வேஷத்தைக் களைந்துவிட்டார்கள். சத்தியாக்கிரகப் போராட்டம் தேசமெங்கும் அல்லோல கல்லோலப் படுத்தி வருகையில் தமிழ் நாட்டு காங்கிரஸ் தலைவர்கள் இருந்த இடம் தெரியாமல் பதுங்கிக்கொண்டார்கள். இவ்வாறு பழம் பெருச்சாளிகளெல்லாம் இந்த இயக்கத்தைக் கைவிட்டவுடன் ஸ்ரீமான் ராமமூர்த்தி சத்தியாக்கிரகத் தலைவர் பதவியை எற்றுக்கொண்டார். "எத்தொழிலுமிலாதார் நாடகக்காரராஞர்" என்பது ஒரு பழமொழி. ஸ்ரீமான் ராமமூர்த்தி அய்யர் சென்னை மாகாணங்களிலுள்ள ஸ்தல ஸ்தாபனங்களிலும், சட்ட சபைகளிலும், ஒரு காலத்தில் மிகச் செல்வாக்குடனிருந்தவர். ஆனல் காங்கிரஸ் கட்டளைப்படி பகிஷ்கரிக்கப்பட்ட சட்ட சபையில் பிரவேசிக்க வேறு வழி யில்லாததினல் கடைசியாக காங்கிரஸ் இயக்கத்தில் புகுந்து கொண்டார்.

ஸ்ரீமான் ராமமூர்த்திக்கு வயது 35 இருக்கலாம். சுந்திரமான முக வசீகரமும், திடகாத்திர ரூபமு முள்ளவர். மிகச் சாமர்த்தியமாகப் பேசக் கூடியவர். இவருக்கு முன் காங்கிரஸ் தலைவரா யிருந்த காலஞ் சென்ற திவான் பகதூர் ராகவாச்சாரியார் காங்கிரஸ் பொக்கிஷத்தைக் காலி செய்து விட்டமையால், ஸ்ரீமான் ராமமூர்த்தி தலைமை யடைந்த அதிர்ஷ்டம் காங்கிரஸ் காலிப் பெட்டியுடனிருந்தது. தமிழ் நாட்டில் ஒரு சுற்றுப் பிரயாணம் செய்து காங்கிரஸ் நிதிக்குப் பொருள் உதவி சம்பாதிப்பதற்காக ஸ்ரீமான் ராமமூர்த்தி பிரயாணத்திற்குத் தயாரானார்.

பல காங்கிரஸ் தொண்டர்கள் சேர்ந்து ஜே! போட்டு எழும்பூர் ஸ்டேஷனில் மிக ஆடம்பரமாக அவரைப் புகைவண்டியில் ஏற்றிவிட்டார்கள். ஸ்ரீமான் ராமமூர்த்தி முதல் வகுப்பு வண்டியில் சாவதானமாகச் சாய்ந்துகொண்டு பத்திரிகை படித்துக்கொண்டிருந்தார்.

வண்டி செங்கல்பட்டு ஸ்டேஷன் வந்து நின்றது. முதல் இரண்டாவது வகுப்புப் பிரயாணிகளைக் காலதாமதமின்றி உபசரிப்பதற்காக ஸ்பென்ஸர் (Spencer) சிற்றுண்டிச் சாலையின் பரிசாரகர்கள் பிளாட் பாரத்தில் தயாராகக் காத்துக் கொண்டிருந்தார்கள். இவர்களைக் கண்டவுடன் ஸ்ரீமான் ராமமூர்த்தி சிறிது தாகசாந்தி செய்துகொள்ளப் பிரியப்பட்டு அவர்களில் ஒரு ஆசாமியைக் கூப்பிட்டு "அலோ! பிரிங் விஸ்கி அண்ட் ஸோடா" (Alo! Bring Whiskey and Soda) என்று ஆங்கில பாஷையில் உத்திரவிட்டார். உடனே ஒரு வெள்ளித் தட்டில் அவர் விரும்பிய பானவகைகள் கொண்டு வந்து அவர் அறையில் வைக்கப்பட்டன. அய்யர் வேண்டிய வரையில் தாகசாந்தி செய்துகொண்டார். புகைவண்டியும் செங்கல்பட்டு ஸ்டேஷனை விட்டுப் புறப்பட்டது.

விஸ்கியின் வேகத்தால் மூர்த்தியின் தலை கிர்ரெனச் சுழன்றது. சரீரமெல்லாம் மகா உக்கிரமான ஒரு தாபம்

ஏற்பட்டது. ஓரிடத்தில் அவரால் உட்கார்ந்திருக்க முடிய வில்லை. எழுந்து வந்து வண்டி நெடுக உலாத்தினர். மற்ற முதல் இரண்டாவது வகுப்பு வண்டிகளிலுள்ள மின்சார விளக்குகளெல்லாம் அணைந்திருந்தன. ஆனல் ஒரு வண்டியில் மட்டும் வெளிச்சமிருந்தது. அவ்வண்டியிலிருப்பவர்களை அறிமுகம் செய்துகொள்ளலா மென்று மூர்த்தி மூடியிருந்த கண்ணுடி ஜன்னல் வழியாகப் பார்த்தார். தகதகவென ஜோதிமயமான ஒரு ஒளி மூர்த்தியின் கண்களில் தென் பட்டது. அதைப் பார்த்துச் சிறிதுநேரம் அவர் ஸ்தம்பித்து நின்ருர். அந்த அறையில் சுமார் 25 வயதுள்ள ஒரு அழகி பக்கச் சார்பில் படுத்தவண்ணமாகப் படித்துக்கொண்டிருந் தாள்.

மேகங்களினிடையே தவழும் பூர்ண சந்திர பிம்பம் போன்ற அவளது முகமானது அலங்கோலமாகக் கிடந்த அவள் கரிய கூந்தலுக்கிடையில் பிரகாசித்துக் கொண்டிருந் தது. பூக்குந்தருவாயில் பூரித்தெழுகின்ற தாமரை அரும்பு போன்ற பயோதரங்களும், பருவ முதிர்ச்சியால் தள தள வெனக் கட்டமைந்து ஜொலிக்கும் சரீர வனப்பும், அவளது ஒப்புயர்வற்ற ஒய்யாரத்தோற்றத்தைக் காண்பித்தன. மிகமெல் லினமான மஸ்லின் பட்டாடை யணிந்து கொண்டிருந்தபடி யால் அந்த வெண்ரோஜா நிறமுள்ள அப்பட்டாடையின் மூல மாக அவள் சரீர காந்தி பளபள வென ஒளி வீசியது. தற்கால நாகரீகமாக—சரீரத்தின் முக்கியாம்ஸங்களில் முக்கால் பாக மும் வெளிப்படையாகப் புலப்பட வேண்டுமென்று சில பாரத புத்திரிகள் விரும்புகின்றபடி—கைகளின் நீளத்தைக் கூடு மானவரையில் குறைத்தும், கழுத்தின் அகலத்தை மிகப் பெரிதாக்கியும், நவீனத்தின் நவீனமாக அவள் அணிந்து கொண்டிருந்த ஜாக்கெட் அவளது புஜங்களின் மழமழப்பை யும் , பயோதரங்களின் பூரிப்பையும், பார்ப்பவர் கண்களுக்கு அவ்வளவாக மறைக்கக்கூடியதாக இல்லை. அருகில் நெருங்

கும் ஆடவர்கள் அறிவிழந்து மயங்கி விழக்கூடிய ஒரு அழகுப் பரிமளம் அவளைச் சுற்றிலும் சூழ்ந்துகொண்டிருந்தது.

இத்தகைய அரிய சேவையைக் கண்டு ராமமூர்த்தி வியப்படைந்து, அந்த வண்டியில் பிரயாணம் செய்பவளுடைய பெயரை அறிந்துகொள்வதற்காகக் கதவிலிருக்கும் பெயர் குறிப்புச் சீட்டைப் பார்த்தார். Miss. பத்மாட்சி என்று அச்சீட்டில் எழுதப்பட்டிருந்தது. இப்பெயரைப்பார்த்த மாத்திரத்தில் மூர்த்தியின் ஆனந்தம் அளவு கடந்து அண்ட பிண்ட சராசரங்களுக்கப்பாலும் சென்றுவிட்டது. தன் சந்தேகத்தை நிவர்த்தி செய்துகொள்வதற்காக அவளை மறுபடியும் கவனித்துப் பார்த்தார். உடனே தன் அறைக்குச் சென்று சந்தடி செய்யாமல் கதவைச் சாற்றிக்கொண்டு, கண்ணாடியின் முன் நின்று, அலங்கோலமாயிருந்த தன் உடைகளைச் சீர் திருத்திக் கொண்டார். முகத்தை ஈரத்துணியால் துடைத்துக் கொண்டார். விஸ்கியின் வாசனை மாறுதற்காக இரு ஜப்பான் ஜிண்டான் மாத்திரைகளை எடுத்து வாயில் போட்டுக்கொண்டு சலவை செய்த கதர்சால்வையை எடுத்துப் போர்த்திக்கொண்டு அதிவேகமாக வந்து பத்மாட்சி இருந்த இரண்டாவது வகுப்பு வண்டியின் கதவைத் தட்டினார்.

"யார்" என்ற அதிகாரத்தொனியுடன் கதவு திறக்கப் பட்டது.

"ஆ! பத்மாட்சி! உன்னை நான் மறுபடியும் காண்பது கனவோ—நினைவோ? சந்தேகமாயிருக்கின்றது," என்று கூறிய வண்ணம் ராமமூர்த்தி பத்மாட்சியின் மிருதுவான கையை எட்டிப் பிடித்தார். இருவரும் ஒருவர்மீது ஒருவர் சற்று சாய்ந்த வண்ணமாக உட்கார்ந்தார்கள்.

—பத்மாட்சி! நாமிருவரும் சந்தித்து வெகு காலமாய் விட்டது. நாம் கடைசியாகப் பிரிந்த காலத்தில் நீ அன்று பூத்த புதுமலர் போலிருந்தனை. என்ன அழகு! என்ன தேஜஸ்! வருஷம் எழெட்டாகியும் உன் ஸௌகுமார்ய குறைவு

படவேயில்லை. மலேயா நாட்டி ருப்பதாகவல்லவோ கேள்விப் பட்டேன். எப்பொழுது சென்னைக்கு வந்தாய் ?

—இன்று காலையில்தான்.

—தனிமையாகவோ ?

—இல்லை ! இல்லை ! என்னுடன் தன வைசியப்பிரபு ஒருவர் வந்திருக்கின்றார். அவர் சென்னையில் தங்கி நாளைய தினம் வருவார். திருக்குற்றாலத்தில் அவருக்கு ஒரு பங்களா இருக்கின்றது. அங்கு தங்கியிருப்பதற்காக நான் முன்னதாகப் போகின்றேன்.

—பத்மாட்சி ! அந்தப் பிரபுவோ உன்னைத் தற்சமயம் ஆதரிப்பவர் ——

—ஆம் !

என்று கூறுதற்குப் பத்மாட்சி நாணமுற்றுச் சிறிது தயங்கினாள்.

"பத்மா ! சென்னை வந்தவள் என்னைப்பற்றி விசாரிக்காமல்கூட வந்து விட்டாயே ?" என்று ராமமூர்த்தி மிக அனுதாபத்துடன் வினவினார்.

—தங்களைப்பற்றி இனி விசாரிப்பதில் பயனென்ன ?

—பத்மாட்சி ! என்னை முற்றிலும் மறந்து விட்டனையோ ?

—மறந்தும் மறக்காமலு மிருக்கின்றேன்.

—பத்மா ! எனது பொருளிலா வாழ்க்கையன்றோ நமது பிரிவுக்குக் காரணமாயிற்று—

மூர்த்தியின் முகத்தில் ஏக்கமும் துன்பமும் உண்டானதைக்கண்டு பத்மாட்சி சிறிது கலங்கினாள். முன் ஒரு காலத்தில் பேரானந்த வாழ்க்கையில் ஈடுபட்டிருந்த பழங்கதை அவள் மனதில் உதித்தது.

—அதற்கு நான் என்ன செய்வது"

என்று பத்மாட்சி சிறிது மனக்கலக்கத்துடன் கூறினுள்.

"உலகத்தில் எப்படியாவது பொருள் சம்பாதிக்க வேண்டுமென்று ஆசை கொண்டாய். திரைகடலோடியும் திரவியம் தேடினுய். ஒரு தன வைசியப் பிரபுவிற்கு உன் அன்பைக் கொடுத்து சரீரமெல்லாம் வைரமாகப் பூட்டிக் கொண்டிருக்கின்றுய். இவ்வளவு செல்வத்திற்கு நான் எங்கே போவது. நான் மிக எழ்மையான ஸ்திதியில் உன் காதலையடைந்தேன். என்ன பயன்? அதை உடனே இழந்துவிட்டேன். என் ஆயுளில் பொருள் சம்பாதிக்க எவ்வளவோ முயற்சிகள் செய்தேன். தேசத்திற்காக எவ்வளவோ உழைத்தேன். அதினுல் எனக்கு ஒன்றும் லாபமில்லை. தமிழ் நாட்டில் காங்கிரஸ் இயக்கத்தில் என்னைவிட மலை விழுங்கி மகா தேவர்களெல்லா மிருந்துகொண்டு அவ்வப்போது அகப்பட்டவற்றை வாயில்போட்டுக் கொண்டு எப்ப மிட்டுவிட்டார்கள். அப்பேர்ப்பட்ட பெரிய ஆசாமிகளிடம் என் வேட்டை பலிக்குமா? இப்பொழுதுதான் எனக்கு நாட்டாண்மைப் பட்டம் கிடைத்திருக்கின்றது. ஒரு கை பார்க்கலாம்" என்றுர் மூர்த்தி.

—தங்களுக்கு இனிமேல் நல்ல திசை: ஆனுல் எனக்கு ஒரு சந்தேக முண்டாகின்றது. தற்சமயம் தேச மிருக்கும் கொந்தளிப்பான நிலைமையில் காங்கிரஸ் பிரசாரத்திற்கு வெளிப்பட்டால் சிறைவாசமல்லவோ கிடைக்கும். தாங்கள் வெளியி லிருந்தாலன்றே பணம் சம்பாதிக்கலாம்" என்றுள் பத்மாட்சி.

—பத்மா! நான் ஒரு அறிவீனனல்ல. சிறைவாசத்திற்கு என்னை அழைக்கக்கூடிய அதிகப் பிரசங்கம் எதற்கும் போக மாட்டேன். பணம் சம்பாதிக்கும் விஷயத்தை மட்டில் கவனித்துக்கொள்வேன்.

—உங்கள் சாமர்த்தியத்தை நான் அறிவேன். எப்படியாவது நீங்கள் செல்வந்தராகிவிட்டால்?—.

பத்தமாட்சி புன்னகை செய்தாள். விற்போன்ற அவள் புருவங்கள் நெரிந்தன. சற்றுநேரம் ஆழ்ந்த சித்தனையிலிருப்ப தாக மூர்த்தி அறிந்து கொண்டார்.

—பத்மா! நீ என்னுடன் வாழ்வதற் கிணங்குவையோ?

மூர்த்தியின் ஆசை அளவுகடந்தது.

—அதிற் சந்தேக மென்ன? இவ்வுலகில் எனக்குப் பொருளாசை தீர்ந்துவிட்டது.

—பின்னர்—" என்று மூர்த்தி ஆரம்பிக்கு முன்,

மறுபடியும் பத்மாட்சி நகைத்தாள். அவள் கண்கள் ஜொளிர்ந்தன. அவளுடைய பார்வை ராமமூர்த்தியின் மனதில் ஊடுருவிப் பாய்ந்தது.

—பத்மா! நீ கடின சித்தமுடையவள். என்னை மறந்தாய். போகட்டும் எப்படியாவது பணம் சம்பாதித்துக் கொண்டாயே. அதுவரையில் கெட்டிக்காரிதான்" என்றார் மூர்த்தி.

—எவ்வளவுதான் சம்பாதித்த போதிலும் மனோ அமைதி யில்லை. தங்கள் மதுரமான வார்த்தைகளையும், அன்பு நிறைந்த சொற்களையும், கேட்டு ஆனந்தமடைந்த நான் என்னேரமும்— "எளவு! எளவு! வந்திச்சி! போயிச்சி! இங்ஙனே! அங்ஙனே! மேலே கைபோட்டால் குளிர்ச்சிக் கட்டிபோலே சிலு சிலு இன்னு இருக்குதுங்ஙனே!" என்ற இவை போன்ற கர்ண கடோமான அநாகரீக வார்த்தைகளை இதுவரையில் கேட்டுக் கொண்டிருந்து நரக வேதனைகளை யெல்லாம் அனுபவித்தாய்விட்டது. என் சம்பாத்தியம் போதும்!" என்று பத்மாட்சி வருத்தத்துடன் கூறினாள்.

அவள் மதி வதனம் சோர்ந்தது. மனதில் துக்கமும் வெறுப்பு முண்டாயிற்று. ராமமூர்த்தியின் தோள்மீது கையைப் போட்டுக் கொண்டு அவரை அணைந்த வண்ணமாக அவர் மீது சாய்ந்தாள்.

எரி மலையின் சிகரத்திலிருந்து பொங்கி எழுகின்ற அனற் குழம்புபோல், ராமமூர்த்தியின் மனதில் எழும்பிய காமத்தீயால் உருகிய ஆசைக் குழம்பு, அளவு கடந்து அணை கடந்து அவர் சரீரமெங்கும் பாய்ந்தோடி என்றுங் கண்டிராத ஒரு புத்துணர்ச்சியை எழுப்பிற்று. அச்சுந்தராங்கியின் அழகுத் திரைகள் நிறைந்த பெருந் தடாகத்தில் விழுந்து, தனது ஆன்மா பேரானந்த மடைகின்ற வரையில் அந்த இனிமையினு மினிய அமிர்தப் பிழம்பை ஆவல்தீர அள்ளி அள்ளிப் பருக வேண்டுமென்று பேராசை கொண்டார். ஆனால் தன் வாயிலிருந்து புறப்படக்கூடிய விஸ்கியின் வாசனையை பத்மாட்சி எங்கே கண்டுபிடித்து விடுகின்றாளோவெனச் சந்தேகித்து "ஸ்! பக்கத்து வண்டியிலிருப்பவர்கள் நம்மைப் பார்த்து விடப் போகின்றார்கள்" என்று கூறிக்கொண்டே தந்திரமாக ராமமூர்த்தி சற்று அப்பால் நகர்ந்துகொண்டார்.

"தாங்கள் எங்கே பிரயாணம்" என வினவினாள் பத்மாட்சி.

"சட்ட மறுப்பியக்கத்திற்காகப் பணமும் தொண்டர்களும் சம்பாதிப்பதற்குத் தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம். நாளைய தினம் சிதம்பரத்தில் முகாம்" என்றார் மூர்த்தி.

"அந்தோ! தங்களைப்பற்றி எனக்கு மிக்க கவலையாயிருக்கின்றது. என் வீணாக ஆபத்தில் சிக்கிக்கொள்ளப் போகின்றீர்கள். என்னுடன் வந்துவிடுங்கள்" என்றாள் பத்மாட்சி.

"பத்மா! உன் அன்பிற்கு வந்தனம். கட்டிய வேஷத்தை எப்படியாவது ஆடித்தானே தீரவேண்டும். தலைவர் பதவியடைந்த நான் உன்னுடன் வந்துவிட்டால் உலகத்தார் ஏளனம் செய்யமாட்டார்களா?"

—அப்படியானால் நான் மறுபடியும் தங்களை எங்கே பார்ப்பது.

—திருக்குற்றாலத்திலேயே இரு கடைசி அடியாக செட்டியாரை ஒரு கை பார்த்துவிடு. நான் சென்னைக்குத் திரும்பியவுடன் உனக்குத் தெரிவிக்கின்றேன். இப்பொழுது துவக்கியிருக்கும் புது நாடகத்தைக் கூடுமான வரையில் விமரிசையாக அரங்கேற்றி அகப்பட்ட வரையில் ஒரு கை பார்த்துக் கொண்டு திரும்பி விடுகிறேன்.

—சாக்கிரதையாக இருங்கள். 144-வது செக்ஷன் அமுலி லிருக்கின்ற இடத்தில் தப்பித்தவறி தலைகாட்டி விடப்போகின்றீர்கள். அந்த செக்ஷனை மீறுவதாகச் சொற்பனத்தில் கூட நினைக்கக் கூடாது.

—பத்மா ! அதைப் பற்றி நீ ஒன்றிற்கும் கவலைப்பட வேண்டாம். அவ்வப்போது சமயோசிதமான யுக்தி யோசனைகள் என் மூளையில் உதிக்கும். நாடகக்காரர்கள் ஒரு உபயோகமற்ற ஆட்டத்தைப் பற்றிப் பிரமாதமான விளம்பரங்கள் செய்து ஜனங்களை ஏமாற்றி விடுவதுபோல்.—ஒரு பகட்டான வித்தை யாடிவிட்டு அதி சீக்கிரம் சென்னைக்குத் திரும்பி விடுகிறேன்.

—என்னமோ — என் மனம் குழம்புகின்றது. நாம் ஏன் மறுபடியும் சந்தித்தோம். நமது பழய நட்பெல்லாம் என் ஞாபகத்தி லுதிக்கின்றது. தங்களைப் பிரிய மனம் ஒப்பவில்லை — —

— பத்மா! ஏன் கலங்குகின்றாய் ? கூடிய சீக்கிரம் நாம் மறுபடியும் சந்திக்கலாம் —" என்று ராமமூர்த்தி கூறிப் பத்மாட்சியை இறுகத் தழுவிக்கொண்டார். வெகு காலத்திற்குப் பின் சந்தித்த அவ்விரு அன்பர்களும் ஆசைதீர முத்தமிட்டுக் கொண்டார்கள். பின்னர் மூர்த்தியும் பத்மாவும் புகைவண்டி சிதம்பரம் வருகிறவரையில் சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

புகைவண்டி சிதம்பரத்தில் நின்றது. ராமமூர்த்தி பத்மாட்சியிடம் விடைபெற்றுக்கொண்டு கீழே இறங்கினர். இவரது வருகையை எதிர்ப்பார்த்துப் பிளாட்பாரத்தில் ஏராளமான கும்பல் கூடியிருந்தது. காங்கிரஸ் தொண்டர்களாகிய டபேரா அய்யங்கார், சொரித்தவளை சாஸ்திரியார், சோம்பேறி மடாதிபதி குண்டோதர ரெகுநாத சர்மா, வாய்க்கொழுப்பு வம்பர் மகாசபைத் தலைவர் சாமிநாதப்பிள்ளை, ஜட்காவண்டி சகோதரர்களின் அதிபர் அல்லாபிச்சை ராவுத்தர் மகன் அத்திரி பாட்சா சாகிப், இவர்கள் ஜே ! போட்டு ராமமூர்த்திக்கு மாலை சூட்டினர்கள். டபேரா அய்யங்கார் ஒரு காப்பி கிளப் காரராகையால் அவருக்கு அப்பெயர் வந்தது. சொரித்தவளை சாஸ்திரி ஒரு சொத்தை வக்கீல். குண்டோதர சர்மா ஒரு பிரபல வக்கீலாயிருந்து போக்கிரித் தனத்தால் தொழிலை இழந்து ராமாயண பாராயணம் செய்து கொண்டு சோம்பேறி மடத்திற்கு அதிபதியானவர். இத்தகைய பிரமுகர்கள்தான் ஸ்ரீமான் ராமமூர்த்தியை வரவேற்றவர்கள். திருவாலூர் எத்தன் தஞ்சாவூர் எத்தனை ஏய்க்க எண்ணிய கதையைப்போல், இந்த வறட்சிகள் ஒன்றுகூடி ஆலோசித்து காங்கிரஸ் பிரசங்கமென ஏற்பாடு செய்து அதன் மூலமாக ஜனங்களிடம் ஏதாவது பணம் பறிக்கலாமென்று ராமமூர்த்தியை வரவழைத்தார்கள். இவர்களையும் சேர்த்து வறட்டிக்கொண்டு போகக்கூடிய நிலையில் அவர் வந்திருக்கின்ருரென்பதை இவர்கள் அறிவார்களோ? மறுதினம் மாலை 5 மணிக்கு ஏற்கனவே அறிவிக்கப்பட்டிருந்தபடி பிரசங்கத்திற்கு!ஏற்பாடாயிற்று. ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடினர். மேளதாள ,வைபவங்களுடன் ஸ்ரீமான் ராமமூர்த்தி மோட்டார்வண்டியில் ஊர்வலமாகப் பிரசங்கமேடைக்கு அழைத்து வரப்பட்டார்.

ஸ்ரீமான் ராமமூர்த்தியைச் சபையோருக்கு அறிமுகம் செய்து வைப்பதற்காக ஸ்ரீமான் டபேரா ஐயங்கார் பிரசங்க

மேடையின் மீது ஏறி நின்று "வந்தேமாதரம் !" என்று கூறிச் சபையோரை வணங்கிவிட்டு "கனவான்களே !" என ஆரம்பித்தார். இதற்குள் கூட்டத்திலிருந்த மரக்காயர் ஒருவர் அடங்காக் கோபங்கொண்டு சீறி எழுந்து "அடேய்—டபோரா கழுவிகிற பார்ப்பான்—லஞ்சம் வாங்கிய ராஸ்கோல்—என்ன காங்கிரஸ்டா—ஊரைக் கொள்ளையடிக்கிற காங்கிரஸ்—கீழே இறங்கிவிடு—" என்று அய்யங்காரைப் பிடரியைப் பிடித்துத் தள்ளிவிட்டார். உடனே கூட்டத்தில் பிரமாதமான கூச்சலும் பெருங் குழப்பமும் உண்டாயிற்று. சொரித்தவளை சாஸ்திரியார் தக் தக் என்று குதித்தார். குண்டோதர சர்மா அன்று பகலில் சாப்பிட்ட விருந்து சீரணிப்பதற்காகக் கொட்டாவி விட்டுக்கொண்டு பறங்கிப் பழம் போன்ற பெரும் வயிற்றைத் தடவிக்கொண்டார். இந்த சந்தடியில் தப்பினது தம்பிரான் புண்ணியம் என்று டபோரா ஐயங்கார் மெல்ல நழுவிவிட்டார். போலீஸ்காரர் வந்து கூட்டத்தைக் கலைத்து விட்டார்கள். காங்கிரஸ் பிரசாரம் இவ்வாறு அலங்கோலமாக முடிந்தது.

பின்னர் ராமமூர்த்தி அந்த ஊரில் ஏதாவது பண வேட்டைக்கு வழி இருக்கின்றதா வெனப் பார்த்தார். அதுவும் பலிக்கவில்லை. சிதம்பரத்திலுள்ள காங்கிரஸ் பார்ப்பனர் தன்னைப் பறிமுதல் செய்யாமல் விட்டவரையில் லாபமென்று அன்றிரவே அந்த ஊரை விட்டுப் புறப்பட்டார்.

மாயவரம், கும்பகோணம், தஞ்சாவூர், திருச்சி, முதலிய விடங்களிலும் ராமமூர்த்திக்கு நல்ல வேட்டை யகப்படவில்லை. இத்தகைய காங்கிரஸ்காரர்களின் ஆர்ப்பாட்டமான பிரசங்கங்களைக்கேட்டு பணமுடிப்பு பணமுடிப்பு' என்று ஏராளமாகக் கொடுத்து எவ்வித பிரயோஜனமு மில்லாமல் ஜனங்கள் வெகுவாக ஏமாந்திருக்கிறபடியால் காங்கிரஸ் பணவேட்டையின் மோசத்தை நன்கு யறிந்துகொண்டார்கள். மூர்த்தி அவர்களுக்கு மாலைகளும், எங்குசென்ற போதிலும் ஜே! கோஷமும்

கிடைத்ததுதான் மிச்சம். அவர் கட்டிய மனக்கோட்டையின் படி பணம் கிடைக்குமென்ற விஷயத்தில் ஏமாற்றமடைந்தார்.

சுமார் 15 தினங்கள் வரையில் சுற்றிவிட்டு ராமமூர்த்தி சென்னை வந்து சேர்ந்தார். அச்சமயம் உப்பளமுற்றுகையைப் பற்றி நடெங்கும் பலமான கிளர்ச்சியாயிருந்தது. திரு. டயாப்ஜி ஸ்ரீமதி சரோஜினி தேவி இவர்கள் தர்ஸனுவிலுள்ள உப்ப ளத்தை முற்றுகை இடுவதற்காகத் தொண்டர்களின் படை யுடன் சென்றதில், அரசாங்கத்தாரால் அனைவரும் கைப்பற் றப்பட்டுத் தண்டனை யடைந்தார்கள். சென்னையிலிருந்தும் உப் பள முற்றுகைக்குச் சில தொண்டர்கள் தயாரானார்கள். ஸ்ரீமான் மூர்த்தி கூடுமானவரையில் அவர்களைக் காலதாமதப் படுத்த முயற்சி செய்து பார்த்தார். தொண்டர்கள் வீறு கொண்டு இவரை எதிர்ப்பார்க்காமலே பிரயாணப் பட்டு விட் டார்கள். உடனே ஸ்ரீமான் ராமமூர்த்தி கோபித்துக்கொண்டு தனது தலைவர் பதவியை ராஜீநாமா செய்துவிட்டுத் தாம் ராஜீய விஷயங்களிலிருந்து ஒய்வு எடுத்துக்கொண்டு பரமார்த் திக ஆத்மஞான விசாரணையில் புகுந்துவிட்டதாகப் பத்திரிகை களில் அறிக்கை யிட்டார்.

## அத்தியாயம் 5.

### சாது சங்கம்—சத்தியாக்கிரகப் படை.

பிர்மாண்டமான ஆரண்யம். மேகங்களினல் மறைக்கப் படாத மிகத் தூய்மையான ஆகாயத்தில் களங்கமற்ற பூரண சந்திரன் பிரகாசித்துக்கொண்டிருந்தும், அடர்ந்த மரங்களுக் கிடையில் சந்திர கிரணங்கள் ஊடுருவிச் செல்ல வழியில்லாமல் இருள் சூழ்ந்து மிகப் பயங்கரமாயிருந்தது. இராக்காலமாதலால் ஆந்தைகள் அலறின. ஒநாய்களும், நரிகளும், ஊளையிட்டன. காட்டுப் பறவைகளிற் சில கூட்டங் கூட்டமாகக் கூடிக் கர்ன கடோமான சத்தத்தை எழுப்பின. ஆனல் அந்த ஆரண்யத்தின்

மார்க்கமாகச் செல்லக்கூடிய விசாலமான ரஸ்தாவில் மட்டும் சந்திர வெளிச்சம் மிகத் துல்லிதமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அந்த ரஸ்தா வழியாகத் தலையில் முக்காடிட்டுக் கொண்டு நீண்ட அங்கியணிந்த ஒரு சாமியார் சாவதானமாக நடந்துசென்றார். அந்த இருள் சூழ்ந்த ஆரண்யத்தில் இரவில் சிறிதும் கலக்கமின்றித் தன்னந்தனிமையாக அவர் மிக ஒய்யாரமாகச் செல்வதிலிருந்து சாமியார் உடுப்பைவிட ஒரு போர் வீரனுடைய உடுப்பு அவருக்கு அதிகப் பொருத்தமானதாயிருக்குமென்று சொல்லலாம். இவ்வாறு நேர்முகமாகச் சென்றுகொண்டிருந்த சாமியார் திடீரெனத் திடுக்கிட்டு ரஸ்தாவின் ஒரு பக்கமாக ஒதுங்கிக் கீழே குனிந்து பார்த்தார். சுமார் 20 அல்லது 22 வயதுள்ள ஒரு மங்கை அலங்கோலமாகக் கீழே படுத்திருந்தாள். சாமியார் அவள் அருகாமையில் மண்டியிட்டு உட்கார்ந்து அவளது சரீரத்தைத் தொட்டுப் பார்த்துச் சிறிது உஷ்ணமிருந்தபடியால் இறந்துபோகவில்லை என நிச்சயித்துக் கொண்டார். மூர்ச்சையாக இருந்த அப்பெண்ணை ஒரு சிறு குழந்தையைத் தூக்குவதுபோல் சாமியார் தூக்கிக்கொண்டு மெதுவாக நடக்கலானார். சிறிது தூரம் சென்றபின் ரஸ்தாவின் அருகாமையில் ஒரு சிறு நீர்ச்சுனை தென்பட்டது. மிருதுவான பசும் புற்றரையில் சாமியார் அப்பெண்ணை சாக்கிரதையாகப் படுக்கவைத்துவிட்டு அச்சுனையிலிருந்து நாலைந்து கை தண்ணீர் அள்ளிக் கொண்டுவந்து பெண்ணின் முகத்தில் தெளித்தார். குளிர்ந்த ஜலம் பட்டமாத்திரத்தில் அவள் மயக்கம் தெளிந்து கண் விழித்தாள். மறுபடியும் சாமியார் சுனைக்குச் சென்று ஒரு கை தண்ணீர் அள்ளிக் கொண்டுவந்து அதனைப் பருகும்படி செய்தார். ஜலம் தெளிக்கப்பட்ட முகத்தில் குளிர்ந்த காற்று ஜில்லென வீசியதால் அம்மாது களை தெளிந்து மெதுவாக எழுந்து உட்கார்ந்து தன் எதிரிலிருக்கும் சன்னியாசியைப் பார்த்து வந்தனம் செய்து—

“ மகா பாவியாகிய என்னை ஏன் பிழைக்க வைத்தீர்கள்” என்று கேட்டாள்.

“ பெண் பாவாய்! உன் ஊர் பேர் வரலாறுகளைத் தெரிவிக்க முடியுமானால் தெரிவிக்கலாம். இல்லையேல் நான் அதை அறிந்துகொள்ள ஆசைப்பட மாட்டேன். நீ எங்கே போகவேண்டும். சொன்னால் உன்னை அவ்விடத்தில் கொண்டு போய் விட்டுவிடுகின்றேன். நீ பசியால் மிகக் களைத்துப் போயிருக்கிறாய். அதிர்ஷ்டவசமாகத் தற்செயலாக யாராவது பாட்டைச்சாரிகள் வந்தால் அவர்களிடம் ஏதாவது ஆகாரமிருக்கும். வாங்கித் தருகின்றேன்” என்றார் சாமியார்.

“ சுவாமி! தங்கள் தெரிசன விசேஷத்தால் என் களை தெளிந்துவிட்டது. என்னை யறியாத ஒரு சக்தி என் சரீரத்தில் உதித்து எனக்கு என்று மில்லாத திடத்தைக் கொடுக்கின்றது. இரண்டு மூன்று தினங்களாக நான் ஆகார மின்றி நடந்து வந்ததினால் களைத்துக் கீழே விழுந்து விட்டேன். தற்செயலாகத் தாங்கள் வந்து என்னைப் பாராதிருந் திருந்தால் கண்டிப்பாக நான் அவ்விடத்லேயே இறந்திருப்பேன். நான் கொண்ட விரதம் மிக மேன்மையானது. இவ் வுலகிலிருந்து இன்னுஞ் சில அரிய செய்கைகளைச் செய்ய எனக்குப் பிராப்தமிருக்கின்றது போலும்! பாரத தேவியின் அருளால் என் லட்சியம் கை கூடு மென்றே நினைக்கின்றேன்” என்று மிகவும் காம்பீரமாகக் கூறினாள் அம்மாதாசி.

“ பெண்ணே! நீ சொல்வது ஒன்றும் விளங்க வில்லை. விபரமாகச் சொல்ல முடியுமா?” என்று சாமியார் வினவினார்.

“ நான் ஒரு அனாதை. என் உற்றார் உறவினர்களால் திரஸ்கரிகப்பட்டவள். நான் இதுவரையில் செய்திருக்கும் பாவங்களின் விமோசனமாகத் தேச சேவையில் ஈடுபட்டு சாத்வீகமான சுதந்திர யுத்தத்தில் உயிரை விடுவதாக முடிவு செய்துகொண்டு தர்ஸனா உப்பள முற்றுகையில் சேர்வதற்

காகச் செல்கையில் இளைப்பினுல் சலித்து மூர்ச்சையடைந்து சோர்ந்துவிட்டேன்." என்ருள்.

"ஓ! நீ கூறுவது உண்மையா? அப்படியானுல் நீ அதிர்ஷ்டசாலிதான். பாரத நாட்டுச் சுதந்திரப் போருக்காக நாடெங்கும் சத்தியாக்கிரகிகள் புறப்பட்டிருக்கிருர்கள். இந்தியர்களுக்கு ஆயுத பலமில்லை. சாத்வீகப் போரில் இறங்கி சத்தியத்தையே அவர்கள் ஆயுதமாக உபயோகிக் கின்ருர்கள். பாரதமாதாவின் சத்திய முரசு தேசமெங்கும் ஒலிக் கின்றது. நாடெங்கும் கிளர்ச்சி யாயிருக்கின்றது. ஆனுல் கொள்கையில் பல வேறுவிதமான வேற்றுமைகளுண்டு. சில தேசத்துரோகிகள் இந்தப் பெயரைக் கொண்டு ஜனங்களை ஏமாற்றிப் பணம் சேகரித்து வருகிறர்கள். ஒன்றிற்கும் உதவியில்லாத பல சோம்பேறிகள் அர்த்தமில்லாமல் வேடிக்கை யென்று கும்பல்கூட்டி "வந்தேமாதரம்" பாடிக் கொண்டு கௌரவமான பிச்சை யெடுத்துச் சாப்பிட்டு வருகின்ருர்கள். இந்தகைய கோஷ்டிகளால் நாட்டிற்குத் தீமையே யன்றி நன்மை கிடைக்கப்போவதில்லை என்பது நிச்சயம். ஆனுல் இந்த ஆரண்யத்தில் வெகுகாலமாக ஒரு சத்தியாக்கிரக சாது சங்கம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இதிலுள்ள தொண்டர்கள் சுதந்திரப்போரின் முன் அணிக்குச் செல்வதற்குச் சமயம் பார்த்துக் கொண்டிருக்கின்ருர்கள். இச் சங்கத்தை அரசாங்கத்தார் அராகஜ சங்கமென்றும் இதிலுள்ளவர்களனைவரும் இராஜத்துரோகிகளென்றும் முடிவு செய்து இவர்களைக் கண்டு பிடித்து நிர்மூலம் செய்யவேண்டுமென்று வெகுகாலமாக முயற்சித்து வருகின்ருர்கள். இந்த சங்கத்தில் பெண்களும் சேரலாம்" என்ருர் சாமியார்.

"சாமி! தங்களைப் பார்த்ததிலிருந்து ஏதோ தெய்வத்தைப் பார்த்ததுபோலிருக்கின்றது. இதுமுதல் தாங்கள் காட்டுகின்ற வழியில் நான் பின்பற்றிவாத் தயாராக இருக்கின்றேன்," என்ருள் அப்பெண்பாவை.

சாமியார் இதற்கு எவ்வித உத்திரமும் சொல்லாமல் மௌனமாக நடக்க எத்தனித்தார். பெண்மணியும் அவரைப் பின்பற்றி நடந்தாள். சிறிது தூரம் சென்றவுடன் ராஜாங்க ரஸ்தாவிலிருந்து ஒரு கால் நடைப் பாதை பிரிந்தது. சாமியாரும் பெண்ணும் அக்கிளை வழியாக நடந்தார்கள். சுமார் இரண்டு மைல் தூரம் சென்றவுடன் ஒரு சிறிய குடிசை தென்பட்டது. அக் குடிசையின் எதிரில் நின்று சாமியார் தன் அங்கியில் மறைத்து வைத்திருந்த ஒரு வெண் சங்கை எடுத்து வாயில் வைத்து ஊதினார். உடனே அக் குடிசைக் குள்ளிருந்து சுமார் 35 வயதுள்ள இரு திடகாத்திர மனிதர் கள் வெளியே வந்து பய பக்தியுடன் சாமியார் முன் நின்று வணக்கம் செய்தார்கள்.

"இப்பெண்மணி ஆகாரமின்றி மிகவும் இளைப்பாக இருக்கின்றாள். இவளுக்கு உடனே ஏதாவது ஆகாரங் கொடுங் கள். நாளைய இரவு வழக்கம்போல் நமது சத்தியாக்கிரக சாது சங்கத்திற்கு இவளை அழைத்து வாருங்கள்" என்று சாமியார் உத்திரவிட்டு மேற்கொண்டு நடக்க ஆரம்பித்தார்.

அந்தப் பெண் ஏதோ பேச வாயெடுத்தாள். அதற்குள் அவர்களிருவரும் பேசாமலிருக்கும்படி ஜாடை செய்தார்கள். அதன் பின்னர் அம் மூவரும் அம்மாயாவினோதப் பரதேசி கண்ணுக்கு மறைகிறவரையில் பார்த்துக்கொண்டு நின்றார்கள். சாமியாரின் உத்திரவுப்படி அப்பெண்ணிற்கு ரொட்டியும், பாலும், பழமும், கொடுத்தார்கள். அவற்றைப் புசித்துவிட்டு நிம்மதியாக அக்குடிசையில் படுத்து நித்திரை செய்தாள்.

சத்தியாக்கிரகிகளின் சாது சங்கத்திற்கு சாமி சச்சிதா னந்தர் தலைவர். தேசத்திற்காகத் தங்களுக் குரியனவற்றை யெல்லாம் துறந்த ஆயிரக்கணக்கான சன்னியாசிகள் அதில் சேர்ந்திருக்கின்றார்கள். இவர்கள் உண்மையில் சன்னியாசி களன்று. இவர்களில் அநேகர் பெரிய செல்வந்தர்கள். அநே

கள் படித்துப் பட்டம் பெற்ற சீமான்கள். பிரபல வக்கீல்களும், பாரிஸ்டர்களும், ரசாயன சாஸ்திர நிபுணர்களும் இக் கூட்டத்தில் சேர்ந்திருக்கின்றார்கள். இவர்களெல்லோரும் தாய் நாட்டிற்காகத் தங்கள் குடும்பத்தையும் ஆஸ்தி பாஸ்திகளையும் வெறுத்து தேச சேவைக்காகச் சன்னியாசம் பூண்டவர்கள். சாமி சச்சிதானந்தர் ஆங்கிலத்தில் எம். ஏ. பட்டதாரி. இவ்வுலக முற்றிலும் சுற்றுப் பிரயாணம் செய்தவர். விந்தமலைச் சாரலில் எவராலும் கண்டு பிடிக்கமுடியாத மிக ரகசியமான விடத்தில் சாதுமடமும், ஆயுதத்தொழிற்சாலையும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. சாது சங்கத்தைச் சேர்த்தவர்கள் பற்பல விதமான மாறு வேடங்களுடன் நாடெங்கும் சுற்றித் திரிந்து கொண்டிருப்பார்கள்:

மடத்தில் சச்சிதானந்தர் உட்கார்ந்து பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார். அச்சமயம் ஆரண்யத்திலிருந்து பெண்ணையழைத்துக்கொண்டு வந்த சன்யாசி அவரெதிரில் வந்து நின்று வணங்கத், தலைவர் அவரை உட்காரும்படி கையமர்த்தினர். அவர் மிக அடக்கமாகச் சற்று தூரத்தில் உட்கார்ந்தார்.

“அருளானந்தா! நகரப் பிரவேசம் போயிருந்தாயே. ஏதாவது விசேஷமுண்டா?” என்றார் தலைவர்.

“மகாத்மாவும், ஜவஹர்லால் நேரும், இன்னும் சிறைச்சாலையில்தா னிருக்கின்றார்கள். மறியல்வேலை மூர்க்கமாகநடைபெற்று வருகின்றது. தர்ஸனு உப்பளத்தை முற்றுகையிட்டுக் கொண்டிருந்த தொண்டர்கள் அத்தனை பேரையும் கைதி செய்து சிறைக்கு அனுப்பிவிட்டார்கள். சரோஜினி தேவி சிறைச்சாலையில் மிக உற்சாகமாக இருக்கின்றார். தொண்டர்கள் சிறை வாசத்தைத் தேவலோக வாசமாக மதித்து மகிழ்ச்சியுடனிருக்கின்றார்கள். அடக்கு முறையும் நாளுக்கு நாள் வலுவடைந்து வருகின்றது. உலகில் ஐந்தில் ஒரு பங்கை ஆள்கின்ற ஆங்கிலேயர்கள் பெரிய ராஜதந்திரிகளல்லவா? எளிதில் விட்டுக் கொடுத்து விடுவார்களா?” என்றார் அருளானந்தர்.

இச்சமயம் வெளியே ஆராய்ச்சி மணி சத்தம் கேட்டது.

"அருள்! வேட்டைக்குப்போன சத்தியாகிரகிகள் திரும்பி விட்டார்கள்போலும்" என்றூர் சாமியார். சுமார் ஐம்பது பேர் துல்லியமான வெள்ளை உடுப்பும் காந்தி குல்லாயும் தரித்துக்கொண்டு சாமியார் முன்வந்து ஒழுங்காக அணிவகுத்து நின்று வந்தனம் செய்தார்கள்.

"மகேந்திரா! வேட்டை பலித்ததா?" எனக் கேட்டார் சாமியார்.

"நமது ஆனந்த கற்பகத்திலிருந்து வேட்டைக்குப்போய் இதுவரையில் வீணுகத் திரும்பியதுண்டா? சுவாமி! பாரத மாதாவுக்காகச் சுமார் இரண்டு லட்சம் ரூபாய்கள் வரையில் பொக்கிஷத்தில் செலுத்தியாய்விட்டது," என்றுன் மகேந்திரன்.

"இத்தொகை எங்கேயிருந்து கிடைத்தது" என்று வினவினுர் சச்சிதானந்தர்.

"பம்பாயிலுள்ள பிரபல பாங்கர் நாராயணதாஸ் கேஸவஜி அவர்களுக்குத் தாய் நாட்டின் தொண்டிற்குப் பொருளுதவி செய்யும்படி எத்தனையோ அபாய அறிவிப்புகள் அனுப்பியும் அவர் லட்சியம் செய்யவில்லை. அவர் அநீதமாக முதலுக்கு முதலத்தனை வட்டி வாங்கும் தயாளப் பிரபு. பம்பாயிலுள்ள பல பெரிய மில்களின் சொந்தக்காரர். ஏழைத் தொழிலாளர்களிடம் சிறிதளவேனும் இரக்கமில்லாமல் மிகக் கொடுமையாக நடந்து கொள்பவர். தொழிலாளிகளின் வாயில் மண்ணை அள்ளிப் போட்டு அநியாயமாகப் பெருஞ் செல்வம் சேகரித்தவர். அவரால் எத்தனையோ பெரிய குடும்பங்கள் செல்வமிழந்து பாதவித்துக் கொண்டிருக்கின்றன. அவரிடம் லேவாதேவி செய்தவர்கள் பின்பு தலை எடுக்கவே மாட்டார்கள். தர்மம் என்பதைக் கனவிலும் கண்டறியார். ஈகை இரக்கமற்ற கன்னெஞ்சினர். அவர் வீட்டில் தீவட்

டிக்கொள்ளை நடந்தது. புலன் அகப்படாது" என்றான் மகேந்திரன்.

"நியாயமே! அநீத வழியில் பொருள் சம்பாதிக்கிற வர்களுடைய செல்வம் நமது மாதாவுக்கு அர்ப்பணமாகட்டும்," என்று சாமியார் கூறித் தன் எதிரிலிருந்த தங்க மணியை அடித்தார். உடனே அனைவரும்; பின்வாங்கினார்கள். அதற்கப்பால் சச்சிதானந்தரும், அருளானந்தரும்|வெகுநேரம் வரையில் அந்தரங்கமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

## அத்தியாயம் ௬.

### மாதாவின் மாட்சி—சக்தி தேவி.

ஒரு நீளமான கருங்கல் மண்டபம். சுமார் நூறு அடி நீளமும் அதற்கேற்ற விஸ்தாரமான அகலமும் உள்ளது. அதில் ஜோதிமயமான மின்சாரவிளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. அம்மண்டபத்தின் ஓர் கடையில் வட்ட வடிவமான சலவைக்கல் மேடையொன்று நிர்மாணிக்கப்பட்டிருந்தது. அம்மேடையின் மீது, மத்தியில் பாரதமாதாவின் விக்கிரகமும், அதைச் சுற்றிலும் காலஞ்சென்ற தாதாபாய் நௌரோஜி, கோக்லே, திலகர், லஜபதிராய், சித்தரஞ்சின தாசர், இவர்களுடைய உருவச் சிலைகளும், அமைக்கப்பட்டிருந்தன. பாரதமாதாவை இத்தேச பக்தர்கள் வணங்கிக்கொண்டிருக்கும் பாவனையாக இருந்தது. பாரதமாதாவின் விக்கிரகம் மட்டில் வெண்கலச் சிலை. மற்றவைகள் வெண் சலவைக் கற்களாலாக்கப்பட்டவை. அம்மண்டபத்தில் சுமார் ஆயிரம் பேர் வரையில் உட்காருதற்கு ஆசனங்கள் போடப்பட்டிருந்தன. நடுவில் சற்று உயர்வாக ஒரு மேடை போடப்பட்டு அதன் மீது ஒரு சலவைக் கல் மேஜையும், ஒரு நாற்காலியும், போடப்பட்டிருந்தது. மண்டபத்தில் தொங்கிக்கொண்டிருந்த மின்சார மணி கணீர் கணீர் எனப் பனிரெண்டு மணி அடித்தது.

சத்தியாக்கிரக சாது சங்கத் தலைவராகிய சச்சிதானந்தர் முதலில் வர, அவரைப் பின்பற்றி சுமார் 50 பேர் ஒரே மாதிரி யான நீண்ட அங்கி யணிந்துகொண்டு வந்தார்கள். இவர்கள் அனைவரும் 30 வயதிற்குட்பட்ட வாலிபர்களாவர். சாமியா ரும் மற்றவர்களும் பாரத மாதாவை வணங்கிய பின், சாமியார் தலைமை ஸ்தானத்தில் அமர மற்றவர்களும் உட்கார்ந்தார்கள். சச்சிதானந்தார் பேச ஆரம்பித்தார்.

"படைத்தலைவர்களே! நமது தேசம் தற்போது மிகக் கொந்தளிப்பான நிலைமையிலிக்கின்றது. சுதந்திரப் புயல் நாடங்கும் அதி உக்கிரமாக வீசிக்கொண்டிருக்கின்றது. சுதந் திர வேட்கையால் இந்தியர்கள் தங்கள் நிலையறியாது தவித்துக் கொண்டிருக்கின்றார்கள். வாய்ப்பேச்சும், கடற் கரைப் பிரசங்கங்களும், ஊர்வலங்களும், இனிப்பயன் படமாட் டா. நம் நாடு சுய அரசு பெறுமுன் இங்குள்ள ஜாதிப் பேய் களெல்லாம் நிர்மூலமாக்கப்படவேண்டும். வேற்றுமை விருட் சங்களை அடியோடு பிடுங்கி எரியவேண்டும். பிறப்பினால் உயர்வு தாழ்வு என்ற கற்பனைகளை உதைத்துத் தள்ள வேண் டும். தீண்டாமை என்ற கொடிய நோயை ஒழிக்க வேண்டும். இனி நாம் செய்யவேண்டிய தெல்லாம் செய்கைகளே! வந் தேமாதரம்! மகாத்மாகாந்திக்கி ஜே! என்று கும்பல்கூட்டிக் கொண்டு வீண் ஆரவாரம் செய்வதால் சுயராச்சியம் வந்து விடுமோ? அரசாங்கத்தார் நம்மை ராஜத்துரோகிகளென் றும், கொள்ளைக்காரர்களென்றும் பெயரிட்டு நம்மைக் கண்டு பிடிக்கப் பலமான பிரயத்தனங்கள் செய்து வருகின் றார்கள். நாம் நமது தேசத்தை அடிமை வாழ்க்கையி லிருந்து மீட்க விரும்பினால் அது எப்படி ராஜத்துரோக மாகும். சுயராச்சியம் இந்தியனது பிறப்புரிமை. அதற்காக நாம் ஏன் போராடக் கூடாது. ஆனால் சில தொண்டர்கள் வெடி குண்டு முதலியவற்றை எரிந்து வீண் கிளர்ச்சிக் கிடங் கொடுத்து விட்டார்கள். புரட்சி இயக்கத்தினால் நாம் எவ்வித

பயனு மடைந்துவிட முடியாது. நமது படையை வலுவாக்க நமக்கு வேண்டியது பொருள்தான். மகாத்மா காந்தியின் பெயரையும் காங்கிரஸ் மகா சபையின் பெயரையும் சொல்லி ஏழை மக்களை ஏமாற்றி எவ்வளவோ பணம் சம்பாதிக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பணமெல்லாம் அவ்வப்போது தலையாட்டிக் கொண்டிருந்தவர்களுக்குப் பூரண ஆகூதியாய் விட்டபடியால் நமக்கு அதில் ஒரு தம்பிடியேனும் உதவிப் படமாட்டாது. அயோக்கியர்கள் தீய வழியில் சம்பாதிக்கும் பணத்தை நாம் பல வழியில் அபகரித்து பாரதமாதாவின் பொக்கிஷத்தில் சேமிக்கின்ருேம். இக்காரியம் மட்டில்தான் இனி நாம் செய்து கொண்டிருக்க வேண்டியது. மகாத்மா காந்தியின் தொண்டர்கள் உப்பு காய்ச்சுகின்ருர்கள். விதேசித் துணி மறியல் செய்கின்ருர்கள். இதனுல் நமது நாடு விடுதலையடைந்து விடுமா ? காந்தி மகாத்மாவென அழைக்கப்பட்டாலும் அவர் பக்குவமில்லாத நிலையில் முன் யோசனை யின்றிச் சட்ட மறுப் பியக்கத்தை நம் நாட்டில் தோற்றுவித்தார் என்று நான் கண்டிப்பாய்க் கூறுவேன். ஆரம்பத்தில் அதை அவர் விளையாட்டாகவும், வேடிக்கையாகவும் நினைத்திருக்கலாம். இவ்வளவு விபரீதங்கள் வருமென்ருல் அவர் இதில் தலையிட்டுக் கொண்டிருக்கமாட்டார். தலையிட்டபின் அவருடைய இயற்கைக் குணமாகிய சண்டிப் பிடிவாதத்தால் விட்டுக் கொடுக்கமாட்டே னென்கின்ருர். இதனுல் அவருக் கென்ன கஷ்டம் ? சிறையில் அவர் போன்றவர்களுக்கு வேண்டிய வசதிகளெல்லாம் அளிக்கப்பட்டிருக்கின்றன. அரசாங்கத்தார் எர்வாடா சிறையில் மகாத்மாவிற்கு வெள்ளாட்டுப் பாலும் பழமும் கொடுக்கிருர்கள். அவருக்கும் அவர் போன்ற பிரசித்தி பெற்ற தேச பக்தர்களுக்கும் சிறைவாசம் அரண்மனை வாசமாக இருக்கிறது. ஒய்வு எடுத்துக் கொண்டிருக்கின்ருர்கள். கடுங்காவல் தண்டனையடைந்த "ஸி" வகுப்புக் கைதிகள் மிகவும் பரிதாபகரமாகச் செக்கிழுக்கின்ருர்

கள். சிறை சென்ற சில்லரை தேசபக்தர்கள் அநாமதேயப் பேர் வழிகளாகையால் சிறையில் "ஸி" வகுப்பினராயிருந்து அங்கு படக்கூடிய கஷ்டங்களை யெல்லாம் அனுபவித்து விட்டுச் சிறை மீண்ட பின்பும், வேலையில்லாமலும், வருவாய்க்கு வழியில்லா மலும், திண்டாடுகின்றார்கள். காங்கிரஸ்காரர்கள் சில்லரை பேர் வழிகளுக்கு ஏதாவது பண உதவி செய்கிறார்களா? இந்த இயக் கத்தினால் இதுவரையில் போலீஸாரால் சுடப்பட்டும் தடியடி பட்டும், எத்தனையோ பேர் மாண்டனர். பதினாயிரக்கணக்கான பேர் சிறைபுகுந்தார்கள். அனேகர் உயிர், பொருள், அனைத்தை யும் இழந்தனர். சிறை சென்றவர்களுடைய மனைவி மக்கள் கள் தவிக்கின்றார்கள். அவர்களுக்கு உதவிசெய்வது யார்? இவ் வாறு மகாத்மாவின் சாத்வீக எதிர்ப்பினால் நம் நாட்டில் எத்தனையோ விதமான கேடுகள் சம்பவித்து விட்டன. இவ்வாறு பாமர ஜனங்களின் ஆவேசத்தைத் தட்டி எழுப்புவதில் யாது பயன்? இத்தகைய கிளர்ச்சிக்கிடை யில் தமிழ் நாட்டில் என்ன நடந்தது தெரியுமா? ஒரு காலத்தில் காங்கிரஸ் மகா சபையின் பெயரால் ஊரை எய்த்த மூர்த்திகளும், அய்யங்கார்களும், அய்யர்களும், ஆச்சாரியார் களும், இருந்த இடம் தெரியாமல் பதுங்கிவிட்டார்கள். உப்பு சத்தியாக்கிரகத்தில் பணவேட்டை அவ்வளவாக இல்லை. ஒன்றுக்கும் பிரயோஜனமில்லாமல் சிறை செல்ல இந்தப் பாப்பனர்கள் ஏன் வருவார்கள்? காங்கிரஸ் என்ற பெரைக் கொண்டு தங்களுக்குப் பொருத்த மில்லாத கௌரவ மெல்லாம் சம்பாதித்துக் கொண்ட தமிழ் நட்டுப் பார்ப்பனர்கள், சட்ட மறுப்பியக்கத்தில் சம்மந்தப்பட்டவர்களைப் போலீஸார் அப்படி அப்படியே பிடித்துக் காரில் எற்றிக்கொண்டு போய் சிறையில் தள்ளுவதைப் பார்த்து நடு நடுங்கிப் போனார்கள். இந்த பேடி களுடைய சுதந்திர வேட்கை யெல்லாம் பண வேட்டையாக வும், பதவி வேட்டையாகவும் முடிந்தது. இந்த சட்டமறுப்பு இயக்கத்தினால் அரசியல் சுதந்தரம் எதுவும் கிடைத்து

விடாது. ஆங்கிலேயர்கள் சமான்யமாக விட்டுவிட்டு ஓடிப்போய் விடுவார்களா? இந்த வீண் கிளர்ச்சி வலுக்க வலுக்க அடக்கு முறைகளும் வலுவடைகின்றன. சுயராச்சியத்திற்கு இன்னும் நம் நாடு பக்குவமாக இல்லே. நாம் சுயராச்சியம் பெறவேண்டுமானல் இங்குள்ள ஜாதிமத வித்தியாசங்கள் அனைத்தும் ஒழியவேண்டும். சமாசமும், சகோதரத்துவமும் உதிக்கவேண்டும். அத்தகைய காலத்தில் நாம் ஆங்கிலேயரை எதிர்ப்பது சுலபம். அந்தச் சமயத்தை நாம் ஆவலுடன் எதிர்ப்பார்த்துக் கொண்டிருக்கின்ருேம்.

அதற்குள் நமது சத்தியாக்கிரகப் படையை மென் மேலும் வலுப்படுத்துதற்கும்,நமது ஆயுத சாலேயில் துப்பாக்கி பீரங்கி, வெடி மருந்து, முதலியவைகள் ஏராளமாகத் தயார் செய்துகொள்வதற்காகவும் பணம் இன்றியமையாதது. காங்கிரஸ்காரர்களேப்போல் நாம் பகிரங்கமாக வெளியே சென்று யாஜகம் செய்து பணம் சேகரிக்கக்கூடிய நிலேயிலில்லே. நமது தொண்டர்கள் மாறுவேடமின்றி வெளியே சென்ருல் 'ராஜத் துரோகிகள் என்று அரசாங்கத்தார் கைப்பற்றிக் கொள்வார்கள். ஆதலால் அயோக்கியர்களேக் கொள்ளே யடித்தும் வழிபறி செய்தும் நமது மாதாவின் பொக்கிஷத்தை நிரப்பிக் கொண்டிருங்கள்," என்று தலேவர் ஒரு நீண்ட பிரசங்கம் செய்தார். தலேவருடைய சொற்களே அங்கீகாரம் செய்ததற்கறிகுறியாக எல்லோரும் எழுந்து நின்ருர்கள். உடனே அம்மின்சார மணி கணீர் என ஒரு ஓசை எழுப்பிற்று. எல்லோரும் மௌனமாகப் பின்வாங்கி மண்டபத்தைவிட்டு வெளியேறினர்கள். அதன்பின் சங்கநாதம் கேட்டது.—அருளானந்தர் வந்து தலேவர் எதிரில் நின்ருர்.

"அருள்! இன்று தினம் நமது சாது சங்கத்தில் யாராவது புதிதாகச் சேர்க்கப்படவேண்டுமோ? சங்கம் முழங்கிற்றே" எனக் கேட்டார் தலேவர்.

"ஆம்! நேற்று ஆரண்யத்தில் ஒரு அனுதைப் பெண்ணைக் கண்டேன். அவள் மகா தீரசாலி. நமது சங்கத்தில் மனப் பூர்வமாகச் சேர விரும்புகின்றாள்" என்று கூறி முடிக்குமுன் இருவர் அப்பெண்ணைக் கொண்டுவந்து பாரத மாதாவின் பீடத்திற்கு முன் நிறுத்தினுர்கள். கருப்புத் துணியால் அவள் கண்கள் கட்டப்பட்டிருந்தன. உடனே கண்கள் திறந்துவிடப்பட ஜோதி சொரூபமான தேவியின் விக்கிரகத்தையும் மற்ற சிலைகளையும் பார்த்த மாத்திரத்தில் அவள் அப்படியே பிர்மித்து அதிசயித்து பூமியில் மண்டியிட்டுத் தலை வணங்கினுள். இதற்குள் சச்சிதானந்தர் மேடையின்மீது ஏறினுர். அருளானந்தர் அப்பெண்ணின் அருகாமையில் நின்றார்.

"பெண்ணே! மனப்பூர்வமாக இச்சாது சங்கத்தில் சேர அபிப்பிராயப் படுகின்றாயா?" என்று கேட்டார் தலைவர்.

"ஆம்!" என்று அவள் தலை யசைத்தாள்.

"இச் சங்கத்தில் சேருமுன் நீ தேவியின் முன் சில பிரதிக்கினைகள் செய்து கொள்ள வேண்டும். இவ்வுலகில் நீ இன்றுமுதல் சன்னியாசம் பெறுகின்றபடியால் காம சேஷ்டைகளை முற்றிலும் மறந்துவிட வேண்டும். இல்வுலக ஆசையிலுழலு பவர்கட்கு வீரமும் தியாகபுத்தியும் உதித்தலரிது. காமம், குரோதம், லோபம், மதம், மாச்சர்யம், என்ற ஐவகைத் துர்க்குணங்களையும் ஒழித்தா லன்றிச் சன்னியாசம் பெற முடியாது. சன்னியாசம் பெற்றுலொழிய இவ்வுலக பந்தத்தை வெறுக்க முடியாது. ஆதலால் இச்சாது சங்கத்தில் சேரப் பிரியப் படுபவர்கள் கண்டிப்பாகச் சன்னியாசியாக வேண்டுமென்பது முதல் நிபந்தனை. பின்னர் உனது உயிர், பொருள் அனைத்தையும் மாதாவின் கைங்கர்யத்திற்காகத் தியாகம் செய்யவேண்டும். இந்நெறிகளிலிருந்து சிறிது நீ தவறினுலும் மரணம்தான் பிராச்சித்தியம். இவ்வாறு மாதாவின் முன் சபதம் செய்துகொள்" என்று கூறினுர் தலைவர்.

அதே மாதிரி சபதம் செய்துகொண்டாள். உடனே அருளானந்தர் ஒரு கூர்மையான பேனுக்கத்தியை எடுத்து அவள் இடது கைப் பெரு விரலில் கீறி இரத்தத்தைச் சிந்த விட்டு "பெண்ணே! இது தான் உன் தைரிய சோதனை! இதற்கு நீ சிறிதளவேனும் கலங்கவில்லை. கூடிய சீக்கிரம் நீ இச்சத்தியாக்கிரகப் படைக்குத் தளபதி யாவாய்" என்று ஆசீர் வதித்தார்.

"அருள்! இவ்வீராங்கனைக்குச் சக்திதேவி எனப் பெயர் கொடுக்கப்பட்டிருக்கின்றது" என்று கூறினார் சச்சிதானந்தர்.

பெரு விரலிலிருந்து இரத்தம் பெருகியது. பாரத மாதாவின் சன்னிதானத்தில் சக்திதேவி சக்தியாகவே விளங்கினாள். அவள் ஒரு சிறிதும் கலங்கினாளில்லை. இவளது மனோ தைரியத்தைப் பார்த்து சச்சிதானந்தர் புன்னகை செய்தார்.

மற்றோர் முறை மணி யடிக்கப்பட்டது. உடனே திடீரென இருவர் தோன்றி சக்திதேவியின் கண்களை மறுபடியும் கட்டி அவள் கையைப்பற்றி அழைத்துக் கொண்டு போனார்கள். மிகப் பொறுமையுடன் தேவி அவர்களைத் தொடர்ந்தாள். அம்மண்டபத்திற்கு வெளியே வந்து மலைச் சாரல் வழயாக நெடுந்தூரம் சென்றார்கள். சுமார் மூன்று மைல் தூரம் வரையில் சென்றதாகத் தேவி எண்ணினாள். அதன் பின் படிக்கட்டு வழியாகக் கீழ்நோக்கி இரங்குவதாக அறிந்தாள். இவ்வாறு இரங்கியது சுமார் 200 படிகளுக்கு மேலிருக்கும். அப்பால் அவள் கண்கள் திறந்து விடப்பட்டன.

ஒரு பயங்கரமான இருண்ட குகை. அவ்விடத்திலும் மிகப் பிரகாசமாக மின்சார விளக்கு எரிந்துகொண்டிருந்தது. அங்கே என்ன அதிசயமென்று சக்தி தேவி உற்றுப்பார்த்தாள். பெருவிரல்கீறப்பட்டு இரத்தம் சிதறியபோதும் அவள் நெஞ்சம் கலங்க வில்லை. ஆனால் அங்கு தென்பட்ட கோரமான காட்சி

யைக் கண்டு தேவி உடல் நடுங்கினள். அவள் ஆயுளில் எக்காலத்திலும் அத்தகைய பயங்கரத்தை அவள் கண்டதேயில்லை.

"சத்தியாக்கிரகிகளுக்கு நரக தரிசனம்" என்று பெரிய எழுத்துக்கள் அக்குகையின் சுவற்றில் வெட்டப் பட்டிருந்தன. ஒன்பது இருப்பு வசிகள் அக்குகையின் சுவற்றி லிருந்து படுக்கை வாட்டத்தில் நாட்டப்பட்டு, அவற்றின் கீழ் நெருப்பிடுதற்கான வசதிகள் அமைக்கப்பட்டிருந்தன. அவற்றின் இடையில் ஒரு மனிதனுடைய எலும்புக் கூடு கோர்க்கப்பட்டிருந்தது.

" அந்தோ ! பரிதாபம் ! இதுதான் பிரதிக்ஞை தவறிய சத்தியாக்கிரகிகளின் தண்டனையோ ?" என்றாள் சக்திதேவி. மறுபடியும் அவள் கண்கள் மூடப்பட்டன. படிக்கட்டுகளை யெல்லாம் தாண்டி வந்த வழியே திரும்பவும் அழைத்துக் கொண்டு போகப்பட்டாள். வழியெல்லாம் கடந்து வருமுன் பொழுதும் நன்றாக விடிந்து விட்டது.

அருளானந்தரால் சக்தி தேவி மடத்திலிருந்த பெண்களுக்கும் படைத் தலைவர்களுக்கும் அறிமுகம் செய்து வைக்கப் பட்டாள். எல்லோரும் அவளைச் சந்தோஷமாக வரவேற்றார்கள். மடத்தைச் சேர்ந்த ஆயுதசாலை, மின்சார யந்திரசாலை முதலியவைகளை அவள் பார்த்து அதிசயித்தாள். மடத்திலிருந்தவர்கள் அனைவருக்கும் இவளிடத்தில் மிகுந்த மதிப்பும் அன்பு முண்டாயிற்று. சிறிது காலத்தில் சக்திதேவி மிகச் சாமர்த்தியவதியானள். "பாரத புத்திரிகளில் இவள் தான் வீராங்கனை. இவளே சக்தி. சக்திதேவி என்று நாம் பெயரிட்டது மிகப் பொருத்தமான பெயர்" என்று சச்சிதானந்தர் புகழ்ந்தார். சாது சங்கத்தில் சக்திதேவி சேர்ந்ததுமுதல் நாட்டில் கொள்ளைகளும், வழிபறிகளும், ஏமாற்றங்களும், அபரிமிதமாயின. சக்தி ஆணுடைதரித்து நகரத்தில் பிரவேசித்து மார்வாரிகளையும் குஜராத்திகளையும் ஏமாற்றி அவர்களிடம் பொருள் பறிப்பாள். இவளது வீரச்செய்கைகளால் நாடெங்கும் திடுக்கிட்டது.

# அத்தியாயம் 7.

## உப்பள முற்றுகை—சுதந்திரப் போர்.

திவான் பகதூர் ராகவாச்சாரியார் மனைவியாகிய ருக்குமணி யம்மாள் உதகமண்டலத்திலிருந்து மாயமாக மறைந்து போனாள். ரங்கராமானுஜம் அவளைத் தேடிப் பார்த்து அலுத்துக் கடைசியாக மனச் சோர்வடைந்தான். ருக்குமணியின் மீது அவன் கொண்ட தகாத காதல் இன்னும் தணிந்தபாடில்லை. அவள் ஞாபகமே எப்போதும் அவனைத் துன்புறுத்திக்கொண்டிருந்தது. அவன் புத்தி அவன் வசப்படாமல் பயித்தியம் பிடித்தவன் போலானான். வீரமுண்டோ? மதன் கையம்பினால் வெந்து வீழ்கைக்கு நேரமுண்டோ? ஆற்றவொணுக் காமப் பெருநெருப்பிற் வீரமுண்டோ? மங்கையர் மோகம் எத்தகைய ஆடவரையும் மயக்கவல்லது. காமத்திற்குக் கண்ணில்லை என்பது பொய்யோ? ரங்கராமானுஜம் சாமான்யமான மட்டியா? ஆங்கிலத்தில் எம். ஏ. பட்டம் பெற்று, இங்கிலாந்து சென்று ஐ. ஸி. எஸ். பரிட்சையிலும் தேர்ச்சியடைந்தவன். அவ்வளவு உயரிய படிப்பின் கௌரவ மெல்லாம் எங்கே? இவ்வளவு யோக்கியதையிருந்தும் கேவலம் பெண்ணாசை அவன் கௌரவத்தையே அடியோடு பங்கப்படுத்தித் தகாத வழியில் அவனை இரக்கிவிட்டதல்லவா? செல்வம், சிறப்பு, படிப்பு, இவை யெல்லாமிருந்தும் ரங்கராமானுஜம் ஒன்றிற்கும் உதவாத மனிதனாக மாறிவிட்டான். சென்னையின் உல்லாச வாழ்க்கைகளிலும், பஸோட்டா (Basota) ஓட்டலின் மதுரமான மதுபான இன்பங்களிலும், தன்மனதைச் செலுத்தி ஒருவாறு ருக்குமணியை மறக்கப் பிரயத்தனப்பட்டான். திவான் பகதூர் ராகவாச்சாரியார் தேசத்துரோகம் செய்து அனீதமாகச் சம்பாதித்த பெருஞ்செல்வம் ரங்கராமானுஜத்தின் நானாவிதமான மனோகர லீலைகளுக்குப் பயன்படலாயிற்று. சென்னையின் நாகரீக வாழ்க்கையில் அவன் அதி துரிதமாக முன்னேறிச்

சென்ருணுயினும், கடைசியாக அவன் ஒன்றிலும் மனே சாந்தி யடைய வில்லே. மறுபடியும் தேசசஞ்சாரம் செய்ய எண்ணி பம்பாய் நகரத்திற்குச் சென்ருன்.

சென்னையிலிருந்து சென்ற தொண்டர் படை உப்பளத்தைத் தாக்குவதற்காக புறப்படுதற்கு ஆயத்தமாயிருந்தது. இதைக் கண்டவுடனே ரங்கராமானுஜத்திற்கு அவர்களில் ஒருவஞக வேண்டுமென்ற ஆசை யுண்டாயிற்று. உடனே தனது நாகரீக ஆங்கில உடுப்புகளேக் களேந்துவிட்டு, காந்தி குல்லாயும், கதர் உடுப்பும் தரித்துக்கொண்டு அத்தொண்டர் படையில் சேர்ந்து கொண்டான். சென்னே மாகாண வாசிகளான அத்தொண்டர்கள் ரங்காராமானுஜத்தை ஆவலுடன் வரவேற்று மிக உற்சாகமாக "வந்தேமாதரம்! அல்லா கூ அக்பர்! மகாத்மா காந்திகி ஜே! மோத்திலால் நேருக்கி ஜே! ஜஹறிலால் நேருக்கி ஜே!" என்று பாடிக் கொண்டு போனூர்கள். கிராமங்கள் தோறும் இவர்களே வழிநெடுக கிராம வாசிகள் உபசரித்தார்கள். போலீஸார் தடிகளுடன் இவர்களேப் பின் பற்றினர். இவர்களுடைய தேச பக்தி எல்லோராலும் கொண்டாடப்பட்டது.

சென்னே மகாணத் தொண்டர் படை உப்பளத்தை முற்றுகை யிட வருகிறதென்றவுடன் சர்க்கார் அதிகாரிகள் வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பார்களா? உப்பளத்தைப் பாதுகாக்க ஈட்டி துப்பாக்கி சகிதம் உப்பளத்தைச் சுற்றிலும் ராணுவம் நிருத்திவைக்கப்பட்டது. ராணுவ தளபதி காப்டன் ஸ்மித் (Smith) என்பவர் காந்தி குல்லாய் தொண்டர்களேப் பார்த்து நகைத்து இந்தியஞகிய ஒரு சிப்பாயைக் கூப்பிட்டு "இது என்ன வேடிக்கை பார்த்தையா? ஆயிரம் சுண்டெலிகள் கூடி ஒரு சிம்மக் கூட்டத்தைத் தாக்கப்போன கதையாக இருக்கின்றது. இந்த உப்பளத்தை இவர்கள் முற்றுகை யிடுவதென்ருல் அரசாங்கத்தார் விட்டுவிடுவார்களா. இந்தத் தொண்டர் படை நமது பட்டாளத்தின் முதல் தாக்கிற்கே போதாது.

துப்பாக்கி முன் இந்த காந்தி குல்லாய் நிற்குமா?'' என்று கூறிப் பரிகசித்தார். சிப்பாய்கள் தொண்டர் படையை விளையாட்டுக் கருவியெனக் கருதினர்கள். தொண்டர்கள் முன்னேறிச் செல்வதும் போலீஸ்காரர்கள் தடியால் அடித்து அவர்களை விரட்டுவதும் மிக வேடிக்கையா யிருந்தது.

ரங்காமானுஜம் தொண்டர் படையில் மிக முக்கியனாய் விட்டான். இவனது சாமர்த்தியத்தினாலும், வாக்குவன்மையினாலும், எல்லோரையும் வசப்படுத்திக் கொண்டான். தொண்டர்கள் போலீஸாருடைய தடியடிகளை யெல்லாம் தாங்கிக்கொண்டு வெகு சிரமத்துடன் சமுத்திர தீரத்தை யடைந்தார்கள். இவர்களால் தாக்கப்பட வேண்டிய உப்பளம் இவர்கள் கண்களுக் கெதிரில் தோன்றியது. ஆனல் துப்பாக்கி சகிதம் அணிவகுத்து நிற்கும் ராணுவர்களைப் பார்த்தால் பயங்கரமாயிருக்கிறது. உப்பு காய்ச்சிவிட்டு.

**அச்சமில்லை! அச்சமில்லை! அச்சமென்பதில்லையே!**
**இச்சகத்திலுள்ளோ ரெல்லாம் எதிர்த்து வந்த போதிலும்**
**கச்சணிந்த கொங்கைமாதர் கண்கள் வீசு போதிலும்**
**உச்சி மீது வானிடிந்து வீழுகின்ற போதிலும்**
**நஞ்சை வாயிலே கொணர்ந்து நண்பர் ஊட்டு போதிலும்**
**அச்சமில்லை! அச்சமில்லை! அச்சமென்பதில்லையே!**

என்று பாடிக்கொண்டு ஊர்வலம் வருகிற கதையல்லவே. துப்பாக்கி குண்டு பாய்ந்தால் உயிரல்லவோ போய் விடும். தொண்டர்களுக்குச் சிறிது உடல் நடுக்கம் ஏற்பட்டது.

“உப்பளத்தை நாம் தாக்குதற்காக இடங்கொடுத்து ராணுவர்! அப்பால் செல்லுகிறவரையில் நாம் அன்ன ஆகாரமில்லாமல் கிடந்து பட்டினிப் போராட்டம் செய்வோம்'' என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றி அரசாங்கத்திற்கு அனுப்பினர்கள். தளபதி காப்டன் ஸ்மித் இத்தீர்மானத்தைப் பார்த்து வயிறு குலுங்க நகைத்தார்.

“இது என்ன பயித்தியக்காரத்தனம்! எங்களால் சண்டை செய்ய இயலாது. நீங்கள் எதிர்க்காமல் விட்டுக் கொடுக்க வேண்டும், இல்லாவிட்டால் நாங்கள் பட்டினி கிடந்து சாகப் போகின்றோம், என்றால் அதற்காக இவர்கள் உப்பளத்தைத் தாக்கும்படி விட்டுக் கொடுத்து ராணுவம் அப்பால் போய்விடுமா? இவர்கள் பட்டினிகிடந்து செத்தால் யாருக்கென்ன? ராஜாங்கமா முழுகிவிடப் போகின்றது” என்றார் தளபதி.

இரண்டு தினம் வரையில் தொண்டர்கள் சமுத்திரக் கரையில் உட்கார்ந்து சத்யாக்கிரகம் செய்துகொண்டும், பாடிக் கொண்டும், பஜனை செய்துகொண்டும், ஜே! போட்டுக் கொண்டு மிருந்தார்கள். ஆயிரக்கணக்கான ஜனங்கள் இவர்களை வேடிக்கை பார்ப்பதற்காகக் கூடிவிட்டார்கள். போலீஸ்காரர் தொண்டர்களை அப்பால் நகரவொட்டாமல் தடியாலடித்துத் தூக்கிக்கொண்டிருந்தார்கள்.

ரங்காராமானுஜம் தொண்டர் படையைவிட்டுப் புறப்பட்டு வெளியேறித் தனிமையாக ஜனக் கூட்டத்தில் புகுந்து சுற்றிப் பார்த்து வந்தான். இவ்வாறு இவன் சுற்றி வருகையில் ஜனத்திரளில் தலையில் முக்காடிட்டுக்கொண்டு குஜராத்திப் பெண்பிள்ளையைப்போல் உடை தரித்துக்கொண்டிருந்த ஒரு பெண்ணைக் கவனித்துப் பார்த்து—“ஆ! ருக்குமணி! இது என்ன கோலம்!” என்று ஆச்சர்யப்பட்டான். உடனே அப் பெண் சைகை காட்டி நடக்க எத்தனித்தாள். ரங்காராமானுஜம் அவளைப் பின்பற்றினான். ஜனத்திரளைக் கடந்து ஒரு ஏகாந்தமான இடம் தேடிச் சென்றார்கள். சிறிது தூரம் சென்றவுடன் கடற்கரையோரத்திலிருந்த ஒரு செங்குத்தான கற்பாறையின்மீது அவர்கள் ஏறினார்கள். சமுத்திரத்தின் அலைகள் அக் கற்பாறையின் மீது தாக்குவதால் மிகப் பயங்கரமான சத்தம் எழும்பியது. அந்தி நேரமாகையால் வானத்தில் படர்ந்திருந்த செவ்வாரியினிடையில் தங்கமயமான சூரியன்

சமுத்திரத்தின் மத்தியில் மறைவது போன்றிருந்த காட்சி மிக விநோதமாயிருந்தது. சமுத்திரத்தில் ஓம் என ஒரு பிர் மாண்டமான நாதம் ஒலித்தது.

ருக்குமணியும் ரங்காராமானுஜமும் கற்பாறையின்மீது உட்கார்ந்தார்கள். ருக்குமணியின் முகத்தில் வழக்கம்போல் புன்னகை தவழ்ந்திருந்தது. ரங்காராமானுஜம் ருக்குமணியைப் பார்த்து—

“கடைசியாக நாமிருவரும் எப்படியோ மறுபடியும் சந்தித்துவிட்டோம். வினையின் வலி யாரை விட்டது. “உன்னாலே நான் கெட்டேன்-என்னாலே நீ கெட்டாய்” என்று நாமிருவரும் கெட்டுவிட்டோம். ருக்குமணீ! எனது மர்மம் வெளியானபின் உன் எதிரில் நிற்கப் பயமடைந்து உதகமண்டலத்திலிருந்து அப்பொழுதே சென்னைக்குத் திருப்பி விட்டேன். அதன்பின் நீயும் மாயமாக மறைந்து விட்டாய். உன்னைத் தேடி அலைந்தேன். உன்னை மறக்கச் சக்தியற்றவனாகத் தேச சஞ்சாரம் செய்து காலம் போக்கலா மென்று நினைத்துப் பம்பாய் வந்ததில்—தற்செயலாக இந்தத் தொண்டர் படையில் சேர்ந்து அதிலிருந்து யாதாமொரு முடிவை யடைவதெனத் தீர்மானித்தேன். உன்னை மறப்பதற்காகவே நான் இத்தொண்டர் படையில் சேர்ந்து அரசாங்க ஆக்கினையை எதிர் பார்த்துக்கொண்டிருந்தும், தற்செயலாக மறுபடியும் நீ வந்து குறுக்கிட்டிருக்கின்றாய். ருக்குமணி! நான் உன்னைக் காண்பது கனவோ? நினைவோ? அல்லது உண்மையாக என் இருகண்களாலும் காண்கின்ற காட்சியோ? என்னால் நம்ப முடியவில்லை. மறுபடியும் நமது வாழ்நாளில் ஏதாவது ருசி ஏற்படுமோ?” என்று ஆவலுடன் கேட்டான்.

“இது என்ன தேசபக்தி வேஷமா? காந்தி குல்லாயும் இக்கதருடையும் உனக்கு எதற்காக? இளஞ்சிங்கம் ஜவஹரிலால்

நேருவன்றோ உண்மையான பாரத புத்திரர். இம்மகா புனித மான சுதந்திரப்போரை உன்போன்ற பேடிகள் பாழாக்கிய துடன் வெள்ளைக்காரர்களுக்குக் கேலிக்கூத்தாக்கி விட்டார்கள். உங்களுடைய வீராவேசம் எங்கே. அந்தப் பளபளப்பான ஈட்டி முனையில் பாய்கிறதுதானே? பார்க்கலாம்," என்று நகைத் துக் கொண்டே கூறினுள் ருக்குமணி.

"ருக்குமணி! என்மனம் போனபோக்கெல்லாம் போக விட்டுக் கடைசியாக எந்த வேலையு மில்லையே யென்றுதான் வேடிக்கையாக இத்தொண்டர் படையில் சேர்ந்தேன். இந்த தேசம் எப்பாழ் பட்டால் நமக்கென்ன? உன்னைப் பார்ப்பதன் முன் இந்த உலகம் எனக்குத் திரணமாக இருந்தது. இனி போலீஸாரால் சிறைபட்டு ஜெயில் வாசம் செய்ய என்மனம் துணியுமா? சிறைவாசம் என்றால் உடல் நடுங்குகின்றது. சென்னை நகரின் உல்லாசங்களையும், பஸோட்டா ஓட்டலின் உயர்ந்த பான வகைகளையும் நான் எப்படி மறந்திருப்பேன். ருக்குமணி! சென்னை நகரின் கடற்கரை காலட்சேபங்களை மறந்து விட்டனையோ?" என்று கேட்டான் ரங்காரமானுஜம்.

"பஸோட்டா ஓட்டலின் மதுபான ஆசையும், கடற் கரை காலட்சேபத்தின் ஆர்வமும் இன்னும் உன்மனதில் குடிகொண்டிருக்க—பேடித்தனமாக இந்த காந்தி வேடம் எதற்காகப் பூண்டாய்?" என்று ருக்குமணி கோபத்தோடு வினவினுள்.

"ருக்குமணி! உன்னைக் காணுத வரையில் உன் பிரிவாற் றுமையால் இத்தொண்டில் ஈடுபட்டேன். இனி அதைப் பற்றி என்ன? அத்தனைபேரும் சாகப்போகின்றார்கள். அல்லது சிறை படப் போகின்றார்கள். உன்னைக் கண்டபின் என் தேசபக்தி யெல்லாம் பறந்தோடிவிட்டது. இப்படியே நாம் வேறு எங்கே யாவது அயல் நாடுகளுக்குச் சென்று சுகமாயிருக்கலாம் வா?" என்று மிக ஆசையுடன் ருக்குமணியின் கையைப் பிடித்திழுத்

தான் ரங்கராமானுஜம். ருக்குமணி கோபாவேசத்துடன் அவன் கையை உதறிக்கொண்டு—

"சண்டாளா? இன்னுமா என்மீது ஆசைப்படுகின்றாய். நீ இதுவரையில் செய்திருக்கும் பாவங்கள் போதாதா? இன்னும் பாவம் செய்ய எத்தனிக்கின்றாயே. உன் பாவங்களுக்கெல்லாம் விமோசனமாக இச்சுதந்திர யுத்தத்திற்குக் களப்பலியாகி விடு. அதுதான் விசேஷம்" என்றாள்.

"உன்னைக் காணுவிடில் நான் கண்டிப்பாக இறப்பதற்குத் துணிந்திருப்பேன். இனி மரணம் என்றால் மிகப் பயங்கரமா யிருக்கின்றதே?" என்றான் ரங்கராமானுஜம்.

"உன்னைப் பெற்று வளர்த்த தந்தையின் மனைவியாகிய என்னைத் தாரமாக அனுபவித்துவிட்டாய். இதைவிடப் பெரிய பஞ்சமா பாதகம் இவ்வுலகிலிராது என்பது நிச்சயம். ஆதலால் உடனே பிராணத்தியாகம் செய்துகொள்வதுதான் உனக்கு பிராச்சித்தியம். அதைவிட்டு இன்னும் என்மீது ஆசைப்படுகின்றாயே! லஜபதிராய், கோக்லே, திலகர், தாஸ், போன்ற பெரியோர்களெல்லாம் இறந்துவிட்டார்கள். பேடியாகிய உன் உயிரை இழப்பதால் நமது நாடு முழுகிவிடப் போகின்றதோ! ஆதலால் இன்றே இச்சுதந்திரப் போரில் உயிரை விடு. அது தான் உத்தமம்" என்றாள் ருக்குமணி.

"ருக்குமணி! ருக்குமணி! என்னை இறக்கும்படியா சொல்லுகின்றாய். உனக்குக் கருணையில்லையா? உன்னை மறந்தாலன்றோ நானிறக்கவேண்டும். முடியாது. ஒருக்காலும் முடியாது. மீன் நாற்றம் வீசும் இந்த உப்பளத்தை விட்டு ஓடிப் போகலாம். வருவாயாக. இத்தொண்டர் படை நாசமாகப் போகட்டும். அதோ பார். ருக்குமணி! ராணுவர் துப்பாக்கிப் பிரயோகம் செய்கின்றார்கள். டம்! டம்! எனக் குண்டுகள் பறக்கின்றன. தொண்டர்படை சிதறி ஓடுகின்றது. என்ன பயங்காம்! என்ன பயங்காம்! ஓடுகின்ற தொண்டர்களை

யெல்லாம் போலீஸார் வளைத்துக் கைப்பற்றிக் கொண்டார்கள். நல்லகாலமாக நான் தப்பித்துக்கொண்டேன்" என்று கூறினான் ரங்காராமானுஜம். அவன் உடல் நடுங்கிற்று.

"இதுதான் தருணம்! அந்தப் போர்க்களத்தில் பாய்ந்து மகா பாதகம் செய்த இந்தப் பாழுடலை ஒழிப்பாயாக. பாரத தேவியின் சற்புத்திரனென என்று மழியாப் புகழைப் பெருவாய்" என்றாள் ருக்குமணி.

"ஆ! ருக்குமணி உன்னைப் பிரிந்திருக்கவே முடியாது" என்று கூறி ரங்காராமானுஜம் ருக்குமணியைக் கட்டிப்பிடித்து இருகத் தழுவிக் கொண்டான். கோபாவேசத்துடன் அவன் பிடியினின்றும் ருக்குமணி திமிறிக்கொள்ள எத்தனித்தாள்.

"நரக தெரிசனம்" என்று ஒரு பயங்கரமான தொனி எழும்பியது. அதே|சமயம் அக்கற்பாறையின் கீழிருந்து சன்னியாசி உடை¦தரித்த 20 சாதுக்கள் துப்பாக்கியை உயர்த்தி இவர்களுக்கு நேராகப் பிடித்தார்கள்.

"ஆ! அருளானந்தரே! மன்னிக்கவேண்டும்!" என்றாள் ருக்குமணி.

"சக்தி தேவி! பிரதிக்ஞை தவறிவிட்டாய். "நமது சத்தியாக்கிரக சங்கமப்படி "நரக தெரிசனம்" செய்ய வரவேண்டும். உனக்கு அதுதான் பிராச்சித்யம்" என்றார் அருளானந்தர்.

"சுவாமி! என்மீது தாங்கள் தவறுதலான அபிப்பிராயம் கொண்டுவிட்டீர்கள். என்சரித்திரம் மிகப்பெரிது. அது ஒரு கதையாக எழுதப்படுதற்கு நான் ஒரு கதாநாயகியாய் விட்டேன். உண்மையில் நான் பிரதிக்ஞையிலிருந்து தவறியவளன்று. ஆயினும் ஒரு புருஷனுடன் இந்த ஏகாந்தமானவிடத்தில் சம்பாஷித்துக் கொண்டிருந்ததும், அவன் என்னை ஆலிங்கனம் செய்து கொண்டதும், எனது சன்னியாசத்திற்குப் பங்

க்ம் தேடிவிட்டன. ஆதலால் சாது சங்கமப் பிரதிக்ஞையி லிருந்து தவறுகிறவர்கட்கு மரணம்தான் பிராச்சித்தியம். அதற்கு முன்னரே எனக்கென ஏற்பட்ட அதி முக்கியமான உலகப் பிரதிக்ஞையிலிருந்தே முற்றிலும் நான் தவறியவள். புருஷனைக் கொலை செய்யும்படி பார்த்துக்கொண்டிருந்த மகா பாபி. மத சம்பிரதாயம் என்று தேசத்தைப் பாழாக்கும் வைதீகர்கள் என் போன்ற வீராங்கனைகளின் பழியை ஏற்றுக் கொள்ளட்டும். என் வாழ்நாளைக் கெடுத்த வரதட்சணை என் பழியை ஏற்றுக் கொள்ளட்டும். ஆனால் சாது சங்க விதிப் படி உயிருடன் இருப்பு வசியில் கோர்க்கப்பட்டு அனலில் வதக்கி வாட்டப்பட நான் விரும்பவில்லை.'' என்று ருக்குமணி கூறி ரங்காராமானுஜத்தை மிக ஆர்வத்துடன் கட்டியணைந்துக் கொண்டாள். அவளது பவழவாய்ச் செவ்விதழ்கள், ரங்க ராமானுஜத்தின் வசீகரமான முகத்தில் பொருந்தப்பட்டு, அவ னுடைய ஆத்ம சக்தியை அடியோடு கிரகிக்கக்கூடியதான ஒரு அன்பு முத்தத்தில் திகழ்ந்தன....................சன்னி யாசிகள் உடனே துப்பாக்கிகளைக் கீழே போட்டுவிட்டு "வந்தே மாதரம் ! ஆ ! வீரசக்தி ! நீயே பாரதமாதாவின் சத்புத்திரி!" என்று கூறி அனைவரும் ஏகோபித்து மண்டியிட்டுக் கைகூப் பித் தொழுதார்கள்.

The Royal Printing Works, Madras.